# பதிற்றுப்பத்து வசனம்

# 397

ஆக்கியோன் :

யாழ்ப்பாணத்து நவாலியூர்

**திரு. ந. சி. கந்தையா பிள்ளை**

(தமிழகம், பத்துப் பாட்டு வசனம், புறப்பொருள் விளக்கம் முதலிய நூல்களின் ஆசிரியன்)

ஒற்றுமை ஆபீஸ்

தியாகராயநகர், மதராஸ்.

1937

 [விலை ரூ. 1

சங்கத் தொகை நூல்களுள் ஒன்றாகிய பதிற்றுப் பத்துச் சேர அரசரின் கீர்த்திப் பிரதாபங்களைக் கூறுகின்றது. சேர அரசர் பலரின் சரித்திரங்களை அறிதற்கு இந்நூல் துணைபுரிகின்றது. இந்நூலைக் கற்பதினால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் தமிழ் நாடு எவ்வகையான நாகரீகம் அடைந்திருந்த தென்பதைப் பட்டப்பகல் போல அறிந்து கொள்ளுதல் கூடும். உள்ளதை உள்ளவாறே கூறும் மெய்ம்மொழிப் புலவர்கள், ஆறு மலை சோலை காடு முதலியவற்றின் வளங்களும், மக்களின் நடை உடை பாவனைகளும், வேந்தரின் மாட மாளிகை கூடகோபுரம், நாடு நகரம், முடி கொடி குடை ஆலவட்டம், தேர் யானை குதிரை காலாள், போர்க்களம் பாசறை ஆதியனவும் பிறவும் நமது மனக் கண்ணுக்கு இனிது புலப்படுமாறு, தமது பாடல்களாகிய திரையில், அழகுபெறச் சித்திரித்திருக்கின்றனர். நமது பழய தமிழகத்தின் ஒரு பகுதியாகிய சேரர் உலகம் பண்டு இருந்த தன்மையை இன்று நம் மனக் கண்களாற் கண்டு களிகூர்தல் எவ்வளவு மகிழ்ச்சிக்குரியதாகின்றது.

பதிற்றுப் பத்திற் பலவழக்கு வீழ்ந்த சொற்கள் காணப்படுதலின் அந்நூலை எளிதிற் பொருள் விளங்கிப் பயில்தல் அரிதாகின்றது. *இந்நூல், உயர்தரப் பரீட்சை

---

* லண்டன் சர்வகலாசாலையார் இதனைப் பீ. ஏ. பரீட்சைக்குரிய தமிழ்ப் பாடப் புத்தகங்களிலொன்றாகச் சில ஆண்டுகளாக விதித்து வருகின்றனர்.

களுக்குப் பாடமாக வைக்கப்பெற்று வருகின்றமையின் இதனைப் பயில்வோர் மிகச்சிரமம் உறுகின்றனர், இந்நூல், பரீட்சைக்குப் பயில்வோர் செய்யுட்களைப் பயில்வதற்குத் துணையாயிருக்கும் பொருட்டு மூலத்திலுள்ள ஒரு சொல் லேனும் விடுபடாமல் வசனமாக எழுதப்பெற்ற தொன்றாத லின், வசனங்களைக் குறுக்குவது இயலாதாயிற்று. ஆயி னும் இதனைப் பயில்வோர் பதிற்றுப் பத்திற் கூறும் விஷ யங்களை அறிந்து மகிழ்வாரென்பதில் ஐயமில்லை.

"குணநாடிக் குற்றநாடி அவற்றின்
மிகைநாடி மிக்க கொளல்."

தமிழ் நிலையம்
நவாலியூர்
1—8—1937.

ந. சி. கந்தையா.

# ஆராய்ச்சி உரை

சங்கத் தொகைநூல் எட்டனுள் பதிற்றுப்பத்து நான்காவதாயுள்ளது. இந்நூலின் முதற்பத்தும் இறுதிப் பத்தும் கிடைத்தில. கிடைத்துள்ள எட்டுப் பத்துகளும் எட்டுப் புலவர்களால் வெவ்வேறு எட்டுச் சேர அரசரின் வீரம் கொடை ஆதியவற்றைப் புகழ்ந்து பாடப்பட்டன வாகும். இப்பாடல்களைப் பாடிய புலவர்களுக்கு அச் சேர மன்னர் மிகுந்த பொன்னையும் நாடுகளையும் பரிசிலாக வழங்கினர். பதிற்றுப் பத்தைப் பாடிய புலவர்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் விளங்கினார்கள். தமிழ் இலக்கண நூலார் குறிப்பிடுவதுபோலச் சேர நாடு கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று. இந்நூலகத்து இக்காலம் வழக்கு வீழ்ந்த சொற்களும், சொல் வழக்கும், பழைய இலக்கண முடிபுகளும் தற்கால மலையாளரின் முன்னோராகிய மேற்குக் கரைத் தமிழரின் பழக்க வழக்கங்களும் காணப்படுகின்றன.

குமட்டூர்க் கண்ணனார், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மீது இந்நூலின் இரண்டாம் பத்தைப் பாடினார் இவ் வரசன் உதியன் சேரலாதற்கு வேள்மான் நல்லினியிடம் பிறந்தான். இவன் கடுஞ்சொல்லுடைய யவனரை வென்றான். இவன் இலங்கை வேந்தனாகிய முதலாம் கயவாகுவின் கி. பி. (169—191) காலத்தவனும் செங்குட்டுவனின் தந்தையுமாவன். இவன் 58 ஆண்டு அரசாண்டான். இந்தச் சேர அரசனும் கண்ணனார் என்னும் புலவரும் 2-ம் நூற்றாண்டின், மத்திய காலத்தவர்களாவர். இவன் வெண்ணிப் பறந்தலையில் கரிகாலனோடு போர் செய்து புண்ணுற்று, (அகம் 55.) நாணித்தான்கொண்ட வாளோடு வடக்கிருந்தான். இவன் கடலிற்சென்று பகைவரது கடம்

பினை அறுத்து அதனால் வீர முரசம் செய்தான். மற்றொரு முறை வடநாடு சென்று ஆரியரை அலறத்தாக்கி, அவர் அரசரைச் சிறைசெய்து இமைய வரையில் தனது விற்பொறியைப் பொறித்தான். இச்சிறந்த வீரன் பகைவர்பால் சிறந்த பொன்னாபரணங்களையும் வயிரம் முதலிய இரத்தினங்களையும் எண்ணிறந்த அளவு திறையாக்ப்பெற்றதோடு, ஒரு பொற்பாவையையும் பெற்றானெனத் தெரிகிறது (அகம் 127). இவற்றை இவன் மாந்தை முற்றத்திற் குவித்து விட்டுப் புண்ணுக்கு நாணித் துறவு பூண்டு வடக்கிருந்தான் (அகம் 127).

மூன்றும் பத்தால் பாலைக் கௌதமனார் பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாடினார். இப்புலவரை இளங்கோவடிகள் 'தண்டமிழ் மறையோன்' எனக்கூறுவர். இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன் தெய்வ பக்தி நிறைந்தவனாதலின் இருபத்தைந் தாண்டு ஆட்சி புரிந்தபின் துறவு பூண்டான். இவன் கௌதமனார் பொருட்டு நெடும்பாரதாயனார் என்னும் புரோகிதர் வாயிலாக பத்து வேள்விகள் வேட்டான். பத்து வேள்வியின் பின் கௌதமனார் மனைவியுடன் மறைந்து தேவருலகம் எய்தினர் என்று சொல்லப்படுகின்றது. சிலப் பதிகாரமும் இச்சம்பவத்தைக் கூறும். அயிரைமலையிலுள்ள குலதெய்வத்தை இவன் அலங்கரித்தான் என்றுஞ் சொல்லப்படுகின்றது.

நாலாம்பத்தால் காப்பியாற்றுக் காப்பியனார் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைப் பாடினார். இச்சேரன் நெடுஞ்சேரலாதற்கு வேளாவிக்கோமான் மகள பதுமன் தேவியிடம் பிறந்தவன். இவன் பூழி நாட்டைவென்று நன்னனைத் தோற்கடித்தான். இவன் சேரலாதனுக்குப் பின் சிம்மாசனமேறினான். இவனுக்குரிய இயற்பெயர் விளங்கவில்லை. இவன் சூடுதற்குரிய முடியைப் பகைவர் கவர்ந்த

மையின் கழங்காயாலும் நாராலும் செய்த முடியைச் சூடினன்; அக்காரணத்தால் கழங்காய்க்கண்ணி நார் முடிச்சேரல் என்னும் பெயர் பெற்றான். இவன் 25 ஆண்டு அரசு வீற்றிருந்தான்.

ஐந்தாம் பத்துப் பாடியவர் பரணர். இப்பத்துக் குரியவன் செங்குட்டுவன். இவன் இலங்கை அரசனாகிய முதலாம் கயவாகுவின் காலத்தவன். அக்காலத்திருந்த சோழ அரசர் உருவப் பஃறேர்இளஞ்சேட்சென்னியும் வேற் பஃறடக்கைப் பெருநற்கிள்ளியும்; பாண்டிய அரசர்: நெடுமாறனும் வெற்றிவேற் செழியனும். இவன் ஆரிய அரசராகிய கன்ன விசயரைக் கங்கையின் வடகரையில் வென்றான்; ஒன்பது சோழ அரசரை உறையூருக்கு அணித்திலுள்ள நேரிவாயிலில் தோற்கடித்தான்; மோகூர் மன்னனாகிய பழையனைப் பணிவித்தான். இவன் இளங்கோவடிகளின் தமையனும் சிலப்பதிகாரத்துள்ள வஞ்சிக்காண்டத்தின் கதாநாயகனுமாவன். இவன் 55 ஆண்டு அரசு வீற்றிருந்தான். இவன் காலம் கி. பி. 150—225.

ஆறும்பத்தால் காக்கை பாடினியார் நச்செள்ளையார் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைப் பாடினார். இவன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின் தம்பியாகிய குடக்கோ நெடுஞ் சேரலாதனுக்கு வேளாவிக்கோமகன் மகள் பதுமன் தேவியிடம் பிறந்தவன். இவன், தண்டாரணியத்திலுள்ளவர்களாற் கவரப்பட்ட பசு நிரைகளை மீட்டு தொண்டியில் கொணர்ந்து சேர்ப்பித்தமை பற்றி இப்பெயர் பெற்றான். இவன் அந்தணருக்கு பசுக்களையும் நிலங்களையும் தானஞ் செய்தான். இவனுக்குத் தலை நகரம் தொண்டி. இவன் காலம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இவன் 38 ஆண்டு அரசு வீற்றிருந்தான் என்ப.

ஏழாம் பத்தால் கபிலர் செல்வக் கடுங்கோவாழி ஆதனைச் சிறப்பித்தார். இவன் அந்துவஞ்சேரலிரும் பொறைக்கு ஒரு தந்தை ஈன்ற மகளாகிய பெருந்தேவியிடத்திற் பிறந்தவன். யானைக்கட்சேய் என்பது இவனுக்கு மறு பெயர். இவன் பெருங்கொடையாலும் அருங்குணங்களாலும் பெயர் பெற்றவன்; திருமால் பத்தியிற் சிறந்து விளங்கியோன். கபிலர் தம் உயிர்த்துணைவனாக விளங்கிய வேள் பாரி உயிர் நீத்ததும், அப்பாரியின் உத்தமகுணங்கள் பலவும் இச்செல்வக்கடுங்கோவிடம் உள்ளனவாகக் கேள்வியுற்று இவனைக் காணச்சென்று ஏழாம் பத்தை இச்சேரன் முன் பாடினர். அவர் பாடலைக்கேட்ட செல்வக் கடுங்கோ, அவ் வந்தணப் பெரியார்க்கு நூறாயிரம் காணம் அளித்ததோடு நற்றா என்னுங் குன்றில் தானும் அவரும் ஏறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டி அப்புலவர்க்கு அளித்தான் இவன் மனைவி நெடுஞ்சேரலாதற்கு மகட் கொடுத்த வேளாவிக்கோமானுடைய மற்றொரு மகளாவள். ஆகவே நெடுஞ்சேரலாதனும் செல்வக் கடுங்கோவும் சகலமுறையினர். இவ்வேந்தர் பிரான் இருபத்தைந்தாண்டு வீற்றிருந்தான். இவன் சிக்கற்பள்ளி என்னுமிடத்திற் துஞ்சினன்.

கபிலர் பாண்டியநாட்டில் திருவாதவூரில் பிறந்த அந்தணன். தான் பிறந்த நாட்டுக்குரிய பாண்டிய ரெவரையாவது இவர் பாடவில்லை. இவர் இளமையிலேயே பாண்டிய தேசம் விட்டுச் சேரநாட்டிற் சென்று வாழ்ந்ததே இதற்குக் காரணமாயிருக்கலாம். இவர் பெரும்பாலும் மலைவளங்களையும் மலைநாட்டு அரசர்களையுமே சிறப்பித்திருக்கின்றனர். இவர் செய்த நூல்கள்: ஐங்குறுநூற்றில் ஒரு நூறு, குறிஞ்சிப்பாட்டு, இன்னா நாற்பது, நற்றிணை

குறுந்தொகை, அகநானூறு புறநானூறு, முதலியவற்றிற் சில செய்யுட்கள் ஆகியனவாகும். இவர் பலதேவன் விஷ்ணு சிவன் முதலிய கடவுளரைத் தமது பாடல்களிற் சிறப்பித்திருக்கின்றனர். பதினோராந்திருமுறையிற் காணப் படும் பாடல்கள் பிறிதொருவர் செய்தனவாயிருக்கலாம். இவர்காலத்தைய புலவர்கள் இவரைப் 'பொய்யாநாவிற் கபிலன்' என்று சிறப்பித்திருக்கின்றனர்.

எட்டாம் பத்தால் அரிசில்கிழார் பெருஞ் சேரலிரும் பொறையைச் சிறப்பித்தார். இவன் செல்வக்கடுங்கோவுக்கு வேளாவிக் கோமான் மகள் *பதுமன் தேவியிடம் பிறந்த மகன். இவன் அதிகமானது தகடூர் மேற்படை யெடுத்துச் சென்று பெரும்போர் புரிந்து, அவ்வூரையும் அதிகமானை யும் அழித்தனன். இப்போரச் செயலே தகடூர் யாத்திரை என்னும் பண்டைநூலிற் சிறப்பித்துக் கூறப்படுவது. இவ் வெற்றி பற்றி 'தகடூ ரெறிந்த' என்னும் அடை யுடன் இவன் வழங்கப்படுவன். அரிசில் கிழார் பாடல் களைக் கேட்டு மகிழ்ந்த இச்சேரன், தானும் தன் மனைவி யும் வெளியே வந்து நின்று, தன் கோயிலிலுள்ள வெல்லாம் கொள்க என்று ஒன்பது நூறாயிரம் காணத்தோடு தன் அரசு கட்டிலையும் புலவர்க்குக் கொடுப்ப, அவன் 'யானிரப்ப நீயாள்க', என்று அவற்றைத் திரும்பக் கொடுத்து அவ் வரசனுக்கு அமைச்சுப்பூண்டார். இச்சேரன் பதினே ழாண்டு வீற்றிருந்தான். இப் பெருஞ் சேரர்க்கு மனைவி அத்துவஞ்செள்ளை. இவன் உக்கிரபாண்டியன் காலத் தவன்.

---

* நெடுஞ் சேரலாதனுடைய மனைவிக்கும் பதுமன் தேவி என்று பெயர்

ஒன்பதாம்பத்தால் பெருங்குன்றூர் கிழார் இளஞ் சேரலிரும் பொறையைச் சிறப்பித்தார். இவன் குட்டுவன் இரும்பொறைக்கு மையூர்கிழான் வேண்மாளந்துவஞ் செள்ளையிடம் பிறந்தவன். இவன் கடல் அடங்கவே லோட்டியவரும், அயிரைமலைத்தெய்வத்தை அலங்கரித் தவருமாகியவர்களின் சந்ததியில் வந்தவன் என்று சொல் லப் படுகின்றது.

சங்க நூல்கள் தொகுத்து முடிந்தது கி. பி. ஐந்தாம் நூற்றூண்டு வரையில் என்று கருதப்படுகின்றது. இறைய ஞரகப் பொருளுரையில் தொகை நூல்களைக் குறிப்பிடு மிடத்துப் பதிற்றுப்பத்தும் காணப்படுகின்றது. ஆகவே இறையனுரகப் பொருளுரை எழுதப்படுவதன் முன் பழந் தமிழ்ச் செய்யுட்கள் தொகுக்கப்பட்டுள்ளன வென்பது தேற்றம். இறையனுரகப் பொருள் நீலகண்டனூரால் கி. பி. ஆரும் நூற்றூண்டு வரையில் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்பது பல்லோர் கருத்து.

இந் நூல் தொகுத்தவராலேயே பதிகங்களும் பாடப் பட்டிருத்தல் வேண்டும். ஆசிரியர் நச்சினூர்க் கினியர் அடி யார்க்கு நல்லார் முதலிய உரையாசிரியர்கள் இப் பதிகங் களைத் தமது உரைகளில் எடுத்தாண்டிருக்கின்றனர். இவர் களின் காலம் கி. பி. 12-ம் நூற்றூண்டு வரையில்.

இனிச் சேர அரசர் கபிலர், பரணர், பாலைக் கௌத மனூர் பெருங்குன்றூர்கிழார் அரிசில்கிழார் முதலிய புலவர் களதும் காலத்தை ஆராய்வோம். பதிற்றுப் பத்திலுள்ள அரசர்களின் பரம்பரை இருவகைப்படும்.

உ

## அரச பரம்பரை

உதியன் சேரலாதன் வேள்மாள் நல்லினி (மனைவி)
(செங்குட்டுவனின் பேரன்)

1. நெடுஞ்சேரலாதன் அல்லது இமயவரம்பன்; 2-ம் பத்து; 58 ஆண்டு; மனைவியர்: பதுமன் தேவி + சோழன் மகள் நற்சோணை

2. பல்யானை செல்கெழுகுட்டுவன் (செங்குட்டுவனின் சிறிய தந்தை); 3-ம் பத்துக் குரியவன்; 25 ஆண்டு

3. களங்காய்க்கண்ணிநார் முடிச் சேரல் (அல்லது) வானவரம்பன் (அல்லது) செல்வக்கடுங்கோ; 4-ம் பத்து; 25 ஆண்டு; மாந்தை—தலை நகர்.

5 ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்; 6-ம் பத்து; 35 ஆண்டு.

4. கடல்பிறங்கோட்டிய செங்குட்டுவன்; 5-ம் பத்து; 55 ஆண்டு; தலை நகர்—கருவூர்; மனைவி: வேள்மான் அந்துவன் சகோதரி பெருந்தேவி.

இளங்கோவடிகள் (சிலப்பதிகார ஆசிரியர்).

ii

அத்துவன் சேரல் இரும்பொறை,

|

1 செல்வக்கடுங் கோவாழி ஆதன்
25 ஆண்டு

|

2 பெருஞ் சேரல் இரும்பொறை
17 ஆண்டு

|

3 இளஞ் சேரல் இரும்பொறை
16 ஆண்டு

இவ்வரசர்களுக்கும் தலைநகரம் தொண்டி

இவ்வரசர்களுள் செங்குட்டுவன் காலம் மாத்திரம் தீர்மானமாகக் கணிக்கப்பட்டுள்ளது அது கி. பி. 175—225 ஆகும். ஆகவே சிலப்பதிகாரம் இயற்றப்பட்ட காலம் கி. பி. 200க்கும் 225க்கு மிடையில் இருக்கலாம் மேலே குறிக்கப்பட்ட 1-ம் அட்டவணையின் 1-ம் 2-ம் 3-ம் அரசர்களதும் 2-ம் அட்டவணையிற் குறிக்கப்பட்ட 3-ம் அரசனதும் கீர்த்திப்பிரதாபங்களைச் சிலப்பதிகாரங்கூறுகின்றது. ஆகவே இவ்விரண்டு பரம்பரைகளிலுமுள்ள அரசர்கள் செங்குட்டுவனுக்கு முற்பட்ட காலத்தவர்களாக வேண்டும். பாணர், (4) செங்குட்டுவனையும் (1) சேரலாதனையும் பாடியிருக்கின்றார். இன்னும் புகாரிலிருந்த உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி (கரிகாலனின் தந்தை) உறையூரிலிருந்த வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி முதலியோரையும் பாடினர். 1-ம் அட்டவணையிற் காட்டப்பட்ட 1 முதல் 4 வரையுமுள்ள அரசர்களின் ஆட்சிக் காலத்தைக் கணக்கிடின் ஒரு நூற்றாண்டுக்கு மேலாகின்றது. இது

ஒருபோதும் பரணருடைய வயசாயிருக்கமுடியாது. ஆகவே ஒவ்வொரு அரசரின் ஆட்சிக் காலமென்றது முடிசூடுவதன்முன் சேர நாட்டின் சில பகுதிகளுக்கு அதிபதிகளா (Viceroys) யிருந்து அவர்கள் ஆட்சிபுரிந்த காலமும் சேர்ந்ததேயாகுமென்க. இந்த இரண்டு அட்டவணையிலும் காட்டிய அரசர்கள் கி. பி. 125-க்கும் 225-க்கும் இடையில் ஆண்டவர்களாதல் வேண்டும்

சிலப்பதிகாரத்தில் ஈரிடங்களில் கயவாகுவின் பெயர் வந்துள்ளது. சிலப்பதிகாரத்திலுள்ள வஞ்சிக்காண்டத்தின் பாட்டுடைத்தலைவன் செங்குட்டுவன். ஆகவே செங்குட்டுவன் கயவாகுவின் காலத்தவன் என்பது தடையின்றித் துணியப்படும். இம்முடிபினையே டாக்டர் S. கிருஷ்ணசாமி ஐயங்கார் முதலிய ஆராய்ச்சியாளர் கைக்கொண்டனர். இங்கிலீஷ் மொழியில் 'தமிழர் சரித்திரம்' என நூல் எழுதிய P. T. ஸ்ரீனிவாச ஐயங்காரவர்கள் இக்கொள்கையை உதறித்தள்ளி சிலப்பதிகாரம் கயவாகு காலத்துக்குப் பிற்பட்டதெனச் சாதிக்க முயன்று கயவாகு என்பது எழுதுவோரால் பிழையாக எழுதப்பட்டிருக்கலாமெனக் கூறினர். கால ஆராய்ச்சியைப்பற்றிய அக்கறை ஏற்படாத காலத்து ஏட்டுப் பிரதிகளைப் பிரதி செய்யும்போது 'கயவாகு' என்னும் பெயரை யாராவது வேண்டுமென்று நூலிற் புகுத்தியிருப்பார்களா? அப்படிப் புகுத்தினும் Prof. சுந்தரம்பிள்ளை அவர் காலத்து அல்லது அதற்குப் பின் இது நிகழ்ந்திருக்கவேண்டும். வான்மீகி இராமாயணம் தென்னிந்தியாவைக் குறிப்பிடும் பகுதி இடைச்செருகல் எனக் கூறுவதன் முடிபும் இப்படியே. தமிழ் நூல்களுக்குக் கூடிய வயசைக் கொடுக்கக்கூடாதென்பது சில சரித்திரகாரர் கோட்பாடு ஆகவே அவர்கள் தங்கள் கொள்கைக்கேற்ப நியாயங்களைக் கண்டு பிடிப்பதில் தலையை உடைக்கின்றனர்.

தோடு கடவுளை வழிபடுங் கொள்கையுமுடைய அடியார், சுடர் விடுகின்ற தீவளர்த்து உகுற்றுகின்ற விரும்பப்படும் மெய்பரந்த பெரும்புகழுடைய ஓமஉணவும்*குறைவில்லாது உண்ணும்படி வருவோரை வேண்டி, விருந்தினரை இடைவிடாது உண்ணச்செய்யும் ஆட்டு வாணிகர், பட்டடையில் வைத்து வெட்டிய வெள்ளிய இறைச்சிக்கொழுங்குறையைத் தாளிக்கும் நெய்யாவுதியும்* செழிய நகரின் நடுவே கடலொலிபோல் ஆர்க்கும்.

மேற்கூறிய இருவகை ஆவுதியின் நாற்றத்தால் இவ்வாறு நாளும் அறஞ்செய்யின் அழகிது என்று விண்ணுறையும் கடவுளரும் விழைவர். இவ்வாறு தேவர்களையும் விருந்தினரையும் பாதுகாத்துக் கொடுக்கக் கொடுக்கக்குறைவுறாத செல்வத்திலே நின்று பழுத்த களங்கமற்ற சிறப்பையும், மேகம்போன்ற வெறியுடைய போர்வல்ல யானையின்மீது (மயிர்க்கண்) முரசு ஒலிப்ப ஆரவாரஞ் சிறந்து நல்ல ஆபரணங்களைத்தருகின்ற, பகைவரின்மண்படுகின்ற மார்ப! பல பசுக்களுடைய முல்லை மாலையணிந்த கோவலர் புல்லுடைய நிலத்தே பல ஆட்டுமந்தைகளைப் பரப்பிக்கற்களுடைய காட்டிலே, பிரகாசிக்கின்ற மணிகளை எடுக்கும் செருப்புமலையையுடைய பூழியர்தலைவ! குவிந்த போர்க்கண்ணி மிலைந்த வீரர்கவசமே! பல பிரயோசனந்தரும் உயர்ந்த சிகரமுடையதும், நீரற்றவழிப் பிரயாணப்படாது பாடித்தங்குகின்ற ..ிய பார்வையுடைய கொக்கின் பரிவேட்புக்கு அஞ்சாத அயிரைமீனின் பெயர் பெற்றதுமாகிய இடத்தே (அயிரைமலையில்) முனைகெடும்படி போர் செய்த உயர்ந்தமலையுடைய பொருந! ஆண்டுதோறும் பொய்யாது மழை சுரந்து மக்கட்கு நோயில்லாத ஊழியுண்டாகுக. கழுவுப்படுகின்ற

---

*ஓம உணவும் ஆவுதியும் ஆர்க்கும் எனவினை முடிவுசெய்க

வாயிடத்து மணம் வீசும் கரியமலர், கமழுகின்ற தாழ்ந்த கூந்தல் நீங்கினது போல் கூம்ப, இரவுக்காலத்து மலர்ந்து, அழகிய முகத்தே சுழல்கின்ற பெரிய களிப்புள்ள மதர்த்த கண்போல் காந்தள் இலங்கி அசைகின்ற ஆற்றிடத்தே வளர்கின்ற மூங்கில்போன்ற (குளிர்ந்த) தோளையுடைய இவளோடு ஆயிர வெள்ளமாகிய பல ஆண்டுகள் வாழ்வாயாக.

## 22

சினம், காமம், மிகுந்த கண்ணோட்டம், பகைவருக்கு அச்சம், பொய் கூறல், பொருள்மேல் மிகுந்த அன்பு, கொலை கொடுமை யோடுபிறவும் அறந் தெரிந்த ஆளுகைக்கு வழி அடைப்பாகும். தீமைகடந்து நன்மை புரிந்து, கடலும் காடும் பலபயனுதவ, பிறர் பிறரை வருத்தாமல், மற்றவர் பொருளைவிரும்பாது, குற்றந்தீர்ந்த அறிவினரை அடைந்து, தம் வருத்தம் களையாது பிறர்க்குப் பகுத்தளித்துண்டு, மக்கள் முதிர்ந்தயாக்கையோடு பிணியின்றிக் கழிய ஊழிகாலம் வாழ்ந்த அறிவுடையோர் வழியில் வந்த வேந்தே !

இரும்பினுற் செய்த குந்தாலியால் வலியபாறையை உடைத்துச் செய்த கிணற்றில் சில ஊற்றுகளால் ஊறுகின்ற நீரை கயிற்றிற் பிணித்த குறுகிய இறைகூடையால் நிறைய மொண்டு கொங்கர் நாடகப் படுத்தியவரும், வேல்தாங்கிய படை உடையவரும் (பகைவர்க்கு) அச்சந்தருபவருமாகிய தோன்றல்! பிடரிமயிருடைய குதிரை, அணிகளாலலங்காரம் பெற்றயானை, அம்புபரப்பிய தேர், போர்விரும்பும் மறவர், மூக்கோல் நெருங்கநாட்டிய சுடுகாடு, உயர்ந்த விசையுடைய வில்லாலும் தளையுருவ எய்யமுடியாத, உயர்ந்த நிலையுடைய வாயிலிடத்துக் கட்டித் தூக்கிய மிக்க கனமுடைய ஐயவித்துலாம், காவற்காடு, ஆழ்ந்த அகழ், நெடியமதிலிடத்து நிரைத்த உள் மேடைகள் முதலிய

வற்றையுடைய உள் அரணை வென்று சூடிய பொன்னுழிஞை மாலையும் தான் வெல்லும் போரு முடையகுட்டுவ !

போர்க்கப்பட்ட முரசை முழக்குவோர் நீரில் (எதிர்) ஒலி எழுப்புதலாலும், நீர்தரும் ஓசையுடன் நீர்விளையாடு வோர் ஓசை எழுப்புதலாலும் ஆரவாரமுடைய விழாக்கள் மிகுந்த, புதுவருவாய் மலியும் குளிர்ந்தவயல் சூழ்ந்த நாடு நீகோபித்து அருள் செய்யாமையால், வெயில் குறை யாத நல்ல பகற்காலத்து துன்பந்தரும் வெண்ணரிக்கு ஊளையிடப் பயிற்றி பிதுங்கிய கண்ணுடைய கூகை குழ றவும், ஆந்தையின் தாளத்துக்கு கொடிய கண்ணுடைய பேய்மகள் ஆடும்படியும் பாழாயின ; இரங்கத்தக்கதாகும்.

## 23

வாடியதலையுடைய உன்னத்தின் கொம்பரில் சில்வண்டுகள் இருந்து கரையும்படி வறட்சிமிகுந்து நிலம்பசுமை யற்ற காலத்தும், வளைத்துக் கட்டிய வாத்தியப் பையைக் கொண்டு செல்லும் கூத்தர் மன்றத்தே சென்று தெருவின் மருங்குகளிற்பாடுவர். அவர்கள் கடியபசி நீங்கஉண்டு மகிழ்ச்சி மிகுந்து ஆட, அலங்கரிக்கப்பட்ட பொன்னாபரணங் கள் ஒலிக்கும்படிவந்து, சிறுமகிழ்ச்சி பெற்றவிடத்தும் பெரிய ஆபரணங்களை வீசுகின்ற, போர் விரும்புந்தானையும் பொன்னாபரணமுமுடைய குட்டுவ ! வீரஞ்செறிந்தபுகழறி யாது உன்னோடு மலைந்தவேந்தர் படைகெட்டொழிந்தனர். மருது தழைத்து ஓங்கிய குளிர்ந்த பெரிய நீர்த்துறை யிடத்து (விளையாட்டு மகளிர், மலரும்தளிரும் முறியும் தாதும் கோடலிற்) சிதைந்து கிடக்கின்ற காஞ்சியோடு முருக்கும் நீருள் தாழ்ந்து அரும்பி நெருப்புப்போல் விளங்கும். அதன் கரையில் நாரையும் செவ்வரியும் குதிக் கும். கழனியின் வாயில்களிலுள்ள சோலைகள் சூழ்ந்த

தோட்டத்தில் நெருப்பொத்த தாமரைமலரும். விளையாட்டு மகளிர் குறுகுதற்கு எட்டாமையால் மலர்ந்த ஆம்பலும் தோன்றும். நாடுகள் இடையறாத புதுவருவாய் பெறும். இவ்வாறு முன் ஒரு போது விளங்கிய (பகைவர் நாடு) புல் மிகவளர்ந்து பக்கங்கள் அழகு கெட்டுத்தூர்ந்து, மரையா ஏற்றுடன் புணர்ந்து வாழவும் மரங்கள் தேவருலகை முட்டவும் ஓங்கி வளர்ந்து காடாயின.

## 24

தூரத்துவிளங்கும் மின்னல்பரந்ததுபோல் புலித்தோல் உறையினின்று வாங்கிய, புலால் நாறும் வாயுடைய வாளை உபயோகிக்கும் மறவர் அதனை வெற்றியின் உயர்வால் ஏந்தி, காவலுடைய அரணைக்கடந்த (மாற்றார்) தார்ப்படையை வென்று பெருமை கொண்டு அணியாய் நிற்கும் பெரும் படையின் தலைவ!

ஓதல், ஓதுவித்தல், வேட்டல் வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறுதொழில்புரியும் அந்தணர் சொற்கேட்டு, உலகம் நின் ஆணைவழி ஒழுக, பாடல் சான்று விரும்பப்படும் நல்ல புகழுடையவனும், திருந்திய மொழியும் ஆபரணங் களை அணிந்தவளது கணவனுமாகிய வேந்தே! நாணேற்றுதல் ஒழியாத வில்வீர! அம்புகள் ஆராய்தற்றொழில் ஒழியாத படை இடம் பெறாது செறிந்து விளங்குகின்ற பெரியபாசறையுடைய சூரிசில்! நிலம் நீர் தீ வளி விசும்பு என்னும்ஐந்தும் அளந்தும்முடிவறியினும் நின்பெருமை அளத் தற்கரிது. உனது வளம் மிகுந்த பெருமையை இனிது கண் டேன். ஒலிக்கின்ற பூண்மழுங்கிய உலக்கையாற் கிளறுந் தோறும் சேப்பின் இலை எழுந்தாடும் மிடாவில் காய்ச்சிய நெருப்புப்போற் சிவந்த இறைச்சியை யாவருங் கண்டு மதி மருளுவதும், உண்போர் மட்டின்றி நுகர்வதுமாகிய

கேடில்லாதசோறு, பிரகாசிக்கும் சுடர் அவிழ்ந்து வானில் ஒளிர, புகழமைந்த வெள்ளி வடக்கே தாழ்ந்து பயன்படும் கோட்களுடன் நிற்குநாளில் நிற்க, சூற்கொண்டு காற்றினால் அலைப்புண்டு சிறு துளிகளைப் பெய்யும் மேகம் கார்காலத்துப் பொய்த்தாலும், குறைவு படாது. ஆகவே நின்புகழ் வாழ்வதாக.

சோறு குறைவுபடாது என்பது வினைமுடிவு.

## 25

இடிஒத்த ஒலியுடன் பெரிய மலையினின்றும் விழும் அருவிபோலக் கொடி யசையவும் வேகமுடைய குதிரை பறக்கவும் நீ நெடிய தேரை ஓட்டிய அகன்ற பகைவர் நாடு அழிந்தவாறு சொல்லின் : நின் குதிரை சென்ற விடங்க ளிற் கலப்பை செல்லா : மதஞ்சொரியும் கன்னமும் கோபமு முடைய யானைக் கூட்டம் பரந்த வயல்கள் பின்செல்வம் பரத்தலை அறியா. கழுதையா லுழும்படி நின் படையாளர் சேர்ந்தமன்றம் பாழாயினபின் பகை அரசர் நகர்களிற் காவலாளர் வைக்கப்பெறூர். கடியகாற்று ஒற்றுதலால் சுடர்விட்டெரிந்த சில இடங்கள் காடுதீய்ந்து ஆண்டலைப் புட்கள் வாழும் கடுநெறியாகவும் முனைகளுடைய பாழிடங் களாகவும் மாறின.

## 26

மனக்கொதிப்பில்லாத கூற்றுவனைப்போன்ற திருந்திய தொழிலுடைய நின் வீரர் கோபித்த (பகைவர்) நாடு (முன்) இருந்தபடி சொல்லின்; ஒருகால் தேர்பரந்த வயல் (அத் தேர் பரந்தமாத்திரையாற்) சேறாய்ப் பின்பு உழுதற்கு ஏர் பரவா; பன்றிகளுழுத கொல்லைநிலம் (அவை உழுத மாத்திரையானே) புழுதியாகிப் பின்பு கலப்பை வழங்கா; மத்து ஒலிக்கின்ற மனைகளில் மத்தின் ஒலிமிகுதியான்

இனிய வாத்தியஒலிகள் இசையா. இவ்வாறு வளம் மிகுந்த நாடு இப்பொழுது மழைபெய்தலின்றி வெப்ப மெய்தி செழிப்பற்றது. கண் நிறையும்படி கண்ணீர் உகுத்து கையுதறும் மெலிந்த நெஞ்சுடையோர் சிறுமை யுறும்படி பீர்க்குப் படர்ந்து பாழான மனைகள் நெருஞ்சி நிறைந்த காட்டுவழிகளாயின. பண்டு இந்நாட்டின் செழிப் பைக் கண்டவர்கள் (முந்திய வளனை) நினைப்பின் வருந்து வார்கள். யானும் வருந்துவேன்.

## 27

ஆண்டுகடோறும் நட்டு உண்டாக்காது தொடர்பாக உண்டாகும் குவளையை உடுத்த வழிகளில் பிரகாசிக்கின்ற வளையணிந்த பெண்கள் அலர்ந்த ஆம்பலின் உட்புறம் மடி யும்படி நடந்து, சுருண்ட கூந்தலிற் சூடிய பூமாலை மீது வண்டுகள் ஒலிக்க அழகிய மருதத்துறை யிற்சென்று (மயில்கள் வயலிற் புகுந்து உழக்காது ஒப்புதற்கு) இசைப் பாட்டுப் பாடு வாராயின், இவர் இயங்களைக் கேட்ட பழக் கத்தானே தம்மைக் கடிகின்ற ஒலியையும் அவற்றின் ஒலியாகக் கருதி மயில் பழனத்துள்ள சோலைகளில் ஆலும். பொய்கையின் மடைத்தலையில் நீரோடும் வாய்க்காலில் நெய் தல் இடையறாது பூக்கும். வண்டுகள் நிறைந்திருக்கின்ற வயல்களில் வலியவாயுடைய வண்டிச்சக்கரங்கள் விரை வாகச்செல்லும்படி எருதுகள் சேற்றிலே துள்ளிச் செல் கின்ற வண்டிகளை ஓட்டுவோரின் ஓசையன்றிப் போரை அறியாத புதிய வருவாயுடைய நல்ல நாட்டின் அழகு, நீ கோபித்துப் பார்த்தலின் மன்றுகளுடன் அழிந்தன.

## 28

கோடை நீளுகையால் குன்றில் அருவிவறண்ட பெரும் வறட்சிக் காலத்தும் தலையிடத்தே தழைகளைச்

சூடிக் கோபித்து உயர்ந்து கரையிடத்தே பொருகின்ற போராற்று நீரின் ஆரவாரமல்லது வெப்பம் இன்றாம். பசிய கண்ணுடைய யானைக் கூட்டம் மடிய ஊக்கத்துடன் வெட்டி வேகமுடைய குதிரையின் சவாரி செய்பவரும், இரத்தக் கறை ஏறியகாலில் வீரக்கழல் அணிந்தவருமாகிய வீரர் (போரின்மையால்) விரைவாக அம்பு தொடுக்கும் தொழிலை மறக்கும்படி காவலை மறந்தனர். இவ்வகையான விளைவுமுட்டுறாததும துன்ப மில்லாததுமாகிய களிடத்து ஆட்சிபுரிதலின் நீ செல்வமுடையை.

## 29

வளையணிந்த மகளிர் அவலிடிக்கும் உலக்கையைவாழை மீது சாத்தி வள்ளைக் கொடி கொய்வதும், கதிர்க் கனத்தால் வளைந்து நெல் விளைகின்றதுமாகிய வயலிடத்துப் பாந்திருக்கும் நீண்டகாலுடைய நாரை வெருண்டோடும்படி, கொழுவிய அயிரை மீனை உண்ணுதற்கு மரங்களிற் கூட்டமாயிருக்கும் கொக்குகளை, வெள்ளிய வளையணிந்த கையுடைய மகளிர் ஓப்புவர்; இடையறாதவிழாவில் வலிக் கட்டு இளக்காத யாழுடைய கூத்தர், மன்றத்தே சென்று மருங்குகளிற் பண்ணமைத்துப் பாடும் அகன்றஇடமுடைய நாடுகள், பல வகைக் கூலங்களோடு பரிசைகளை மண்ணினால் மறைக்கும் மாக்கள் அஞ்சவும் அலறவும் பொருது காவலுடைய மதிலைக் கடக்கும் பலயானையுடைய குட்டுவனது வரம்பில்லாத தானை பரத்தலினால் அழகு கெட்டு கண்டார்க்குப் பரிசிலாக அளிக்கும் தன்மை உடையவாயின.

நாடுகள் ஆயின என்று வினைமுடிவு செய்க.

## 30

பெரிய துறையின் கரையிடத்து பூங்கொத்துகள் செறிந்த புலிக் கொன்றை வளரும். மணிக்கலம் போன்ற

நெய்தற் பூவுமிலையுஞ்செறிந்த கழியிடத்தே உள்ள செழித்த சோலையின் கண்ணுள்ள புன்னையின் வெள்ளியபூங் கொத்துக் களினிடையே பட்சிகள் தங்கும். உயர்ந்த மணலுடைய கரையில் அடுப்பங் கொடியோடு மலையும், கடல் கொண்டு வந்த சங்கு திரையிலே துவண்ட வருத்தத்தாலே ஈனுகைக்கு மெய்வருந்திக் கதறும். (கரையில் நின்றோரில் வளைகாலக் கேட்டோர்) அம் முத்தெடுக்க வென்று வந்து முத்தையன்றி அதனோடு பவளத்தையும் எடுப்பர். இவ்வியல்பினதாகிய குளிர்ந்த கடற்கரைப் பக்கங்களும், காந்தள் மாலையணிந்த கொலைவில் வேட்டுவர் சிவந்த கொம்புடைய ஆமானின் ஊனோடு காட்டுயானையின் வெண் கொம்பையும் அழகிய வீதிகள் தோறும் கள்ளின் விலையாகக் கொடுக்கும் குன்றினுச்சியிலுள்ள புன்புலங்களாகிய இடங்களும், விதைகள் அறுக்கின்ற காலத்துச் செய்யப்படும் பல அழகிய விழாக்களில், தேன்பாய்கின்ற மருத மரங்களைப் பிடுங்கிக்கொண்டு பெருகி மணற் கோட்டையைச் சூழ்ந்த வெண்டலைச் செம்புனலை அணைசெய்யும் விருப்பமுடைய கூட்டம் முழவொலிக்கின்ற மூதூரிடத்து விழாக்காணச் செல்லும் செழிய பல மருத நிலத்துஊர் களும், தினைப்புனம் உழுவோர் வரகுமீது இருத்திய குழந்தைகள் மிருது வாகிய தினைமாவைப்பகுத்துண்ணும் புன்புலம் பொருந்திய அழகிய ஊர்களும், பல பூக்கள் மண்டிய காட்டின் அச்சம் நீங்கி செவ்வரக்குப்போன்ற நுண் ணிய மணற் கோடுகளைக் கழங்காடு மிடமாகக்கொண்ட ஒள்ளிய ஆபரணங்களணிந்த மகளிர், கழலணிந்த தலைவரோடுகூடிச் செல்லும் கடல் சார்ந்த இடங்களும் பிறவும் ஆகிய நிலத்திலுள்ள முரசுடைய வேந்தரும்வேளிரும் வஞ் சினங்கூறுவர் ; கூறிக் கடலும் காடுமாகிய அரணுடையோர் அஞ்சும்படி, வலிமிகுந்த கடியஜலி விசுப்படைந்து அதிரு

மாறு கடுஞ்சினத்தோடு முழங்கும் மந்திரங்கூற, கரிய கண்ணுடைய பேய்மகள் கையுதறி நடுங்க, முரசுறை கடவுளைப் பூசிக்கும் உயர்ந்தோன் ஏந்திய, எறும்பும் உண்ணாத ஆச்சரியமுடைய இரத்தங் கலந்த பயங்கரமான பலியை கரிய கண்ணுடைய காக்கையும் பருந்தும் இருந்து உண்ணும், (பருந்தும் காக்கையும் உண்ணல் போரில் வெற்றி உண்டாதற்குரிய நிமித்தம்). (இவ்வாறு வேளிரும் பிறரும் நிமித்தம் பாராநிற்க) குன்றாத வலியும் ஒள்ளியவீரம் பொறித்த கழற்காலும் (பகைவரின்) பெரிய போரைச்சிதைத்த வெற்றி வீரரின் இடியேறுபோன்று நிலத்தை அதிர்க்கும் குரவின் தன்மையோடு, கடுஞ் சினவேந்தே! நின் தழங்குதலுடைய முரசு (வீரர் யுத்தத்துக்குப் புறப்படும் பொருட்டு) பெருஞ்சோறளித்தற்கு முழக்கப்பட்டது.

பதிகம்

இமையவரம்பன் தம்பி உம்பற்காட்டில் தன்கோல் நிறுவி உள்மதிலைக்கைக்கொண்டு பகற்காலத்துத் தீவேட்டு, தனக்குலமுதியோரை மதியோடொத்தவதண்ணளியோடு தழுவிக் கொண்டு அவர்க்குத்தன்னாட்டைப் பகுத்துக் கொடுத்து, கரியகண்ணுடையயானைகளை வரிசையாக நீட்டி (மேற்கும் கிழக்குமாகிய) இருகடல நீரையும் ஒருபகலில் ஆடி அயிரைமலையிலுள்ள தற்குல தெய்வமாகிய கொற்றவையைப்பரவி ஆற்றல் சிறந்த வலிமையோடு அகன்ற புகழும் உயர்ந்த கேள்வியுமுடைய நெடும் பாரதாயனார் தனக்குமுன்னே துறந்து காடுபோக அது கண்டு தானும் துறவுபூண்டு காட்டிலேபோன பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பத்துப்பாட்டுப் பாடினார்.

பாடிப்பெற்ற பரிசில்: நீர் வேண்டியது கேண்மின் என யானும், என்பார்ப்பனியும் சுவர்க்கம் புகல்வேண்டும்' என

பார்ப்பாரிற் பெரியாரைக்கேட்டு ஒன்பது பெருவேள்வி வேட்பிக்கப் பத்தாம் பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும் காணாராயினர்.

இமயவரப்பன்தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

---

## நான்காம் பத்து.

### 31

குன்றைத் தலையிற் சுமந்து கூட்டமாகிய கடலை ஆடையாக உடுத்த அழகிய உலகில் மக்கள் ஒருவரைப் போலப் பலரும் கையைத் தலையிற் கூப்பி ஆரவாரிக்கும் பேரொலி, திசைகளின் நாலு வேறுவகைப்பட்ட நடுவிடங்களிலும் ஒருங்கு எழுந்து ஒலிக்கும். தெளிந்த ஓசையுடைய மணிகளை அடிப்போர் (தீர்த்தம் ஆடுவோர் அது ஆடுதற்கு இது முகுத்தமென்று அறிந்து வருதற் பொருட்டு) அம்மணியை ஒலித்து ஆரவாரிப்பர். உண்ணாது இருந்த விரதிகள், குளிர்ந்த துறையில் மூழ்கி, வண்டு தேகின்ற பொலிந்ததாரும் சீதேவியாரும் பொருந்திய மார்பில் கண்ணை ஒத்த வட்டமாகிய நாறுகின்ற துளப மாலை அணிந்த திருமாலை வணங்கி, (வரம்பெற்று) நெஞ்சு மலிந்த உவகையராய்த் தாம் தாம் துஞ்சுபதிகளிலே பெயரும்படி இருள் அகல விரிந்து, மலை உச்சியில் கூடுகின்ற உவாமதியம் விளங்கித் தோன்றும். நீ அம் மதியம் வெளிப்பட்டாற் போலத் தோன்றி, நொந்த குடிகளின் துன்பத்தைப் போக்கிப் பண்ணழிந்து கிடந்த முரசின் பண்ணழிவு தீர்த்தாய். நின்கீழ்வாழ்வாரைக் காத்தற் பொருட்டு அவர்க்கு அவர்கடனெல்லாம் செய்து முடித்த உனது

அழகிய மார்பு, வடக்கு தெற்காகக் குறுக்கே கிடக்கும் தண்ணிய துளிகளைப் பெய்கின்ற மேகத்தைத் தலையில் உடைய பனி ஒழுகும் மலையை ஒத்தது. கடவுள் அஞ்சி என்னும் குடியில் வந்த சிற்றரசன் வானத்தில் அமைத்த தூங் கெயிலின் கதவிற்குக் காவலாக இட்ட கணையமரம்போல் உயர்ந்த பெரிய அழகிய முழவுத் தோழுடையை; வெண்டி ரையுடைய கடல் சூழ்ந்த உலகில் (தூங்கெயில் அழித்து வளவிய புகழ்நாட்டிய செல்வமுடைய வண்டனை ஒத்தனை. வண்டு மொய்க்கும் தழைத்த கூந்தலும், அறஞ்சிறந்த கற் பும், குழையை விளக்கும் ஒள்ளிய நுதலும், பொன்னுபா ணங்களை விளக்கும் சுழித்த உந்தியும் உடையவளும், தெய் வப் பெண்களுட் சிறந்த அருந்ததி அன்னளுமாவள் நின்தேவி. மண் அதிர்ந்து இரங்க ஒலிக்கும் வெற்றி முரசை முழக்கி வேல மரங்கள் சூழ்ந்த கோட்டையிற்றங்கிய, மாலையும், பொற்கழலுமணிந்த வலியதாளுமுடைய, அடங் காத பகைவர் வலி கெடும்படி பொருத நின்படைத் தலைவர் புறங்கொடுத்தவர்களை (வேல் முதலியவற்றுல்) எறியார். நின் தானை நட்பினருக்கு அரணமும் பகைவருக்கு அச்சமு மாயுள்ளது. போர் மேம் பாட்டினையுடைய வேந்தே உனது மாட்சிகள் பலவாகும்.

## 32

மிகுந்த போர் செய்யும் குரிசில்! முத்துக்கொம் புடைய இளம் யானைகள் பிளிற மிக எழுகின்ற வேகத்தை யுடைய காலாட்படை, ஓடுங்கிய இடங்களிற்சென்று கோ பம்தணியவும் பெரிய கிளைமகிழவும் பகைவரை அழித் தது. அதனல் பலதிசைகளிலும் விளங்குகின்ற புகழால் நீ மாட்சி எய்தினை. உனது பரந்த செல்வத்தினையும், தாழ்ந்த குடிகளைத் திருத்திய வலிமிகுந்த வெற்றியையும் எல்லாம் எண்ணின், (எண்ணுதற் குபயோகிக்கின்ற) கழங்குகளின்

பக்கங்கள் தேயும். கொலையுடைய போரை விரும்பும் வேந்தே! நின் பல் குணத்திலும் ஒன்றைக் கொண்டே யான் வியந்தேன். அப்பலவற்றுள்ளும் வியப்பான குணம் யாதெனில்: கொடிய வலி கெட்டு அஞ்சி அழியும்படி பெரிய மலை ஒத்த யானையொடு வயல்களை அழித்து, நீண்ட காலுடைய நாரை இருந்து இரை கவரும் (கதிரின் கனத்தால்) வளைந்த மூங்கிலை ஒத்த நெல் பொய்யாது விளையும் கழனிகளுடைய நாட்டை நீவென்று, பகைவரை அகப்படுத்திக்கொண்டு பகைவேண்டாமென்று ஒழிந்திருப்பவர் மீதும் வெகுண்டிருத்தலே தொழிலாகவுடைய பகைவர் இடத்தாயினும் நீ சினவாதொழிகின்ற பொறையேயாம்.

## 33

கொடித் தேருடைய வேந்தே! இது பெரிதும் இறும்பூதாயிருந்தது; யாதெனில் தெள்ளிய மணிகட்டியதும் வலிய காலுடையதுமாகிய (பட்டத்து) யானையைக் காவன் மரத்திற் கட்டினை. நீண்ட நீருடைய துறைகலங்கப்படிந்து தங்கிய, கரையுடைய கடல் போன்ற அணிவகுப்புடைய பெரும்படை வயல்கள் கெடும்படி நாட்டுள் செறிந்து சென்றது. அப்படை, வாள் மதிலாகவும், வேல் காவற்காடாகவும், உயர்த்திய சிவந்த அலகுடைய கூர்வேற் கருவிகள் வளைந்த அகழாகவும், வின்னாண் உமிழும் அம்பு கூரிய முள்ளாகவும், ஆரெயில் போன்றது. ஆரெயில் போன்ற நின்படை திரண்டு போர் செய்யக் கருதின் போரவெதிர்த்த மன்னர் போரமாட்டாது நின்னை நீங்குவர். இஃதே அதுவாம்.

## 34

ஒப்பற்ற பெரிய வேந்தே! நீண்ட கொடியுடைய தேரினும், நெற்றிப் பட்டம் விளங்கும் புகர் நெற்றியிற் பொன்னணிந்த யானையின் வலிய கழுத்திலும், நிலையான

நிலத்திலும் பொருந்திய கோபம் மாறாத வீரருடன் சிவந்த தலையாட்டமணிந்த குதிரையை யூர்ந்து செல்வை; சென்று புறங்கொடாத வீரரின்மாறுபாடு கெடமுரசு ஒலிக்கும் பெருங்களத்தே நெருங்கி ஆரவாரம் மிகவும் வேந்தர் படவும் எதிர் நின்று கொன்று வெற்றிபெறும் ஆற்றல் மிக்க குற்றந் தீர்த்த மைந்த ! அவ்வாற்றலிடத்து வருங்குறைகளை நீயே பாது காத்தலால் குன்றாத வலியும் வீரம் பொறிந்த கழற்காலும் விரிந்த நூலாடையுமுடைய வராகிய பகைவர் அஞ்சி) நீங்குவர்.

## 35

குற்றந் தீர்ந்த வேந்தே ! நின்படை அழிவுபடாமல் நீ ஓம்பு வினை செய்வை ; பெரிய களிற்று யானையின் பிரகாசிக்கின்ற பெரும் கொம்போடு நெடியதேரின் சில்லுத்தாக்கும் பெரிய களத்தே பெடையொடு கூடிய பருந்தின் சேவல்கள் கூட்டமாகப் புகுந்து (பிணங்களை) உண்ணும். உட்களத்தில் தலை வெட்டுண்டு எஞ்சி நின்ற கவந்தம் ஆடும். மாலைக்காலச் செக்கர்வானம் போன்ற உட்களத்தின் நடுவே பேய்கூத்தாடும். இவ்வாறு தான் வெல்லும் போரில் நீங்காத புது வருவாயினையுடைய வெற்றிப் பெருமைகள் உன்னிடத்தில் புகழும்படி யமைந்தன.

## 36

வலிய உள்ளத்தோடு புதிதாகப் பகைத்து வரும் போரை வெல்லுவை. பனை தறிக்கப்படும் தோப்பில் கையினால் ஆடிய பல துண்டுகளைப்போல யானைகள் (வெட்டுண்டு) மடிந்து கிடக்கும். இருபடைகளின் வாள்களும் தெரியாது மயங்குகின்ற முற்படைகளின் போரில் பட்ட மாவும் மக்களுமாகிய பிணங்களை (பேய்கள்) உண்ணும். அப்பேய்கள் பொறித்தது போன்ற புள்ளி உடைய கழுத்தும் புல்லிய

புறமு முடைய எருவைப் பெடையைப் புணர்ந்த சேவல் குடுமியுடைய புல்லுருவி என்னும் புள்ளுடன் இரையைக் கொண்டு பள்ளங்களிற் செல்லும். அச்சந்தரும் கூளி கள், நீண்ட இரைகள் பலவற்றைச் சுமந்து மேடுகளிலும் பள்ளங்களிலும்சென்று உண்டு மகிழ்ந்தாடும்; இரத்தமாகிய செந்நீர் ஓடும். இவ்வாறு நீ பல போர்களைச் செய்குவை அதனால் உனது வலி கெடாதும் வளம் கேடுறாதும் இருந் தன. அதன் மேலும் இவற்றிற்கு அடியாகிய நின் போர் வளம் வாழ்வதாக.

## 37

வாழ்த்துவோர் நின் புகழ் கூறிவாழ்த்த பகைவர் வருந்த துன்பம் நல்குவை; நட்பினர் நுகர நல்ல ஆபரணங் களைச் சிதறுவை; இவ்வாறு அன்று விந்தடங்கிய குற்றந்தீர் ந்தசெம்மல்! வானளவு பரந்த நல்ல புகழ் உலகில் நிலை பெறத் தளர்ந்த குடிகளைச் செம்மைப்படுத்திய மென் மேலும் வலம் தருகின்ற வெற்றியுடையை. பெரியபனைமாலை யையும் வீரக்கழலையும் அணிந்து நிலைபெற்ற (பகைவர்) அரணைக்கடந்து அதில் வாழும் மறவரைப் பிடித்துக் கொள்வை; பின் பழைமையான நிலைமைச் சிறப்புடன் உனது நிழலில் வாழும் வீரர்களுக்குக் கொடுமை அறும் படி வைத்த பிறழாத கொள்கையுடைய இப்பண்புகளை நீ பெரிதுடையையாய் நின்றாய் ஆதலால் வெந்திறல் வேந்தே இவ்வுலகத்தோர் ஆக்கத்தின் பொருட்டு நின்செல்வமும் வாழ்நாளும் வாழ்வதாக.

## 38

பலவளம் மயங்கிய நாடு திருத்தியவனும், கழங் காய்க் கண்ணியையும் நார்முடியையு முடையவனுமாகிய சேர! மதிலின் முன்புறம் சிதையும்படி காவற் கபாடத்தை அழித் தற்கு ஏவுதலினால் காவலைக்கடக்கும் கிம்புரியிறக்கிய கொ

ப்புடைய யானைகளும், சிவந்தபிடரி மயிருடைய வலிய குதிரைகளும்,வள்ளன்மையும்,பெரிய வீரக்கழலும் மாலையு முடைய சேரலர் வேந்தே! பரிசிலர் வாழ்வே! பாணர் நாளவை! வாணுதல் கணவ! மன்னர் ஏறே! மாசறவிளங் கும் வடுஆழ்ந்த மார்புடைய வசையில்லாத செல்வ! வான வரம்ப! செல்வராகிய உலகத்தார் பலருக்கும் அரசே! இனிய பண்டங்களைப் பெறுமிடத்து அவற்றைத் தனித் தனி நுகர்வேம் தருக என விரும்பாத வருத்த மில்லாத நெஞ்சோடு பகுத்து உண்ணும் உணவைத் திரட்டிய ஆண்மையானே பிறர்க்கெனவாழ்வாயாக. உலகத்திலுள்ள செல்வர்கள் எல்லாருள்ளும் நின் நல்லிசை மிகும்.

## 39

வெவ்விய தும்பைசூடி வெகுண்ட வலிய பகைவரின் அச்சந்தரும் முனை அலற எடுத்துக் கொட்டப்படுவதும் சேனையைப் போருக்கு ஏவுதலை யுடையதுமாகிய முரசு முழங்கும். ஆர்ப்போடு செரு மிகுந்து காவலுடைய அரண்கெடும்படிசெல்லும் காலனை ஒத்த அடங்காத, கடுஞ் சின முன்ப! பொறித்ததுபோலும் புள்ளியுடைய கழுத் தும் புல்லிய புறமுமுடைய புறாக்கூட்டங்கள் கண்டு அஞ் சும், வாடிய வேல மரத்தின் உலர்ந்த கொம்பிற் சிலந்திபின் னிய அசைகின்ற வலைபோன்ற நூலாலன்றி மயிரினால் நெய் யப்பட்ட போர்வையில் அழகிய முத்துக்கள் தூக்கிப் பிர காசிக்கின்ற மணிகளை விளிம்பிலே அழுத்தி பொற்ற கடு வைத்துச் செய்த நார் முடியுடைய சேரல்! நீ பிறர்க்கென வாழ்கின்றமையின் நின்படையினரும் நின் போர்ப்புகழ்கூறி எனக்கு இல்லையெனமறார்.

## 40

இன்னிசை ஒலிக்கும் முரசைக் குறுந்தடி ஓச்சி முழக்கி ஆரவாரித்துத் தோளிற் புண்ணுடைய (மாற்றார்)

வீரர் போர்முனையில் இறக்கக் கொட்டைக் கரந்தை வளரும் வயல்களில் சென்று தங்கும் நின்தானை; இனிப் பிறர் யார் களைநர்; பெரும! நின்றானை படைத் தலைவரோடு ஊர்முகத்தழியா தொழிக. எயிலின் கண்ணுள்ள வீரர் ஆரவாரமற்று அடங்கவும் பகைவர் அழியவும் வெள்ளிய இதழ் நிரைத்த பூச்சூடி அரவஞ் செய்து எழுந்த வேந்தரது அரிய வலியைக் கெடுத்து தன் படையை அவ்வேந்தர் நாட்டிற் பரப்பி வெற்றி கொள்வதற்குத் தூக்கிய கையுடையை; பொன்னாலாய கண்ணியும் பொற்றேருமுடைய நன்னனது சுடர்விடும் வாகையை வெட்டியதார்ப் படைமிகுந்த வலியுடைய நார் முடிச் சேரல்! புல்லியதாளுடைய உன்னம், உன்னோடு போர் நினைவார்க்கு உலறிக் காட்ட, வெறிமிகும்படி பண்டங்கள் சேர்த்த குளிர்ந்த கள்ளை (இரவலர்க்கு) வரையாது கொடுத்தற்கு உண்ணுகின்ற, சுனை ஓடுகின்ற நேரிமலையுடையவனே! இளையர் களிப்பு மிகுந்து மழலைச்சொற்களைக்கூறி மகிழ்ச்சி மிகுந்தவர்களாய் பெரிய களத்தை வாழ்த்துவர்; மெல்லிய சாயலுடைய மகளிர் மலர்ந்த வேங்கையைப்போல் ஆபரணங்களை அணிந்து அழகிற் சிறந்து விளங்குவர்; பாணர் பசிய பூச்சூடுவர்; பூண் சேர்த்து நின்ற யானைகளைத் தோட்டி நீவாது பாகர் ஏவுதலினால் எழுந்த கோபத் தீ காடு உடைய நாடு தெரியும்படி சுடர்விடும். இவ்வாறு வலிய தொழில் உடையயானைகள் பலவற்றைத் தருவன். ஆதலின் மேகம் போன்ற இருண்ட கூந்தலுடைய விறலி! நீ செல்வாயாக.

## நான்காம் பதிகம்

நீங்காத செல்வமுடைய சேரலாதற்கு வேளாவிக் கோமான்(மகள்)மதுமன் தேவி யீன்ற மகன், முனை நடுங்கப் பல் புகழ் வளர்த்து ஊழின் ஆகிய உயர் பெருஞ்சிறப் பினால்

பூழி நாட்டைப் படையெடுத்து வென்றான். வட்டமாகிய பூவுடையகடம்பு நிற்கும் பெருவாயில் நகரிலுள்ள நன்னனை நிலையான போரில் வலி கெடுத்தான். அவனது பொன்னை ஒத்த வாகையை வெட்டி இரத்தவெள்ளம் யானையை இழுத்துச் செல்ல பல போர் செய்து கள வேள்வி வேட்டு நலி வெய்திய குடிகளைத் திருத்தினான். இவ்வாறு செல்வமிருந்த வெற்றியுடைய களங்காய்க் கண்ணிநார் முடிச் சேரலைக் காப்பி யாற்றுக் காப்பியனார் பத்துப் பாட்டுப் பாடினார். பாடிப்பெற்ற பரிசில்: நாற்பது நூறாயிரம் பொன் ஒருங்கு கொடுத்துத்தான் ஆள்வதிற் பாகங் கொடுத்தான், அக் கோ களங்காய்க்கண்ணிநார் முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

---

## ஐந்தாம் பத்து

### 41

சேர்த்து முறுக்கப் பெற்றதும் ஓசை முதிர்ந்ததுமாகிய வளைந்த நல்லயாழை இளையர் எடுத்துச் செல்வர். பண்ணமைந்த முழவும் ஒரு கட்பறையும் மூக்கிற்றண்டைக் கணுவறுத்துச் செய்த (நெடுவங்கியமும்) பிறவுமாகிய ஆடற்றுறைக்கு வேண்டுவ பலவற்றையும் செறித்துக் கட்டியபையைக் காவிச் செல்லும் (பாடற்றுறையிற்) கை தேர்ந்த இளையர் கடவுளைத் துதிப்பர். வீரமுடையகளிறு, மலையில் ஓங்கி வளர்ந்த வேங்கையின் சுடர் விடும்பூவுடைய கிளையை முறித்துப் பெரிய தலையிற் சூடும்; சூடி எறிபடைகளாற் (பொரும்) மறவர் வலிய தண்டு ஏந்திப் போருக்கு எதிர்த்து (ஆர்ப்பது) போல் சுரபுன்னை நெருங்கிய காடு எதிரொலிக்கும் படி பிளிறும். மழை பெய்யாமையால் மலையிலுள்ள மூங்கில் வாடி நிற்கும். இவ்வகையான மலைகள் ஒன்றிரண்டல்ல (பல) கடந்து திண்ணிய தேருடைய

வசையில்லாத பெருந்தகையைக் காணுதற்கு வந்தேன். ஒருவர் போலப் பலரும் வஞ்சினங் கூறி மாற்றார் மண்டலங்களைக் கொண்டு முடித்த வீரர், முரசு முழங்கும் போரில் எதிர் நின்று அரசரைக் கொன்று (ஆறாத) சீற்ற மிகுதியால் பகைவரின் கரிய தலையை உலக்கையால் மிளகு இடிப்பதுபோல் இடித்துக்கொன்று இடையறாதுஆரவாரம் எழுப்புவர்; இவ்வாறு ஆரவாரம் எழுப்பும் கடற்பரப்பில் (பகைவரை) முறிய அடித்து, காவலுடைய அகன்ற பரப்பில் வெற்றிமிகும் புகழ் ஒருங்கமைய, காற்றால் சிதறும் துளிகள் விடுபடும் திரைகளுடைய பனிக் கடலுள், கடிய கதியுடையதும் பிடரி மயிருடையதுமாகிய வெண்ணிறக் குதிரையை ஊர்ந்த நின் தாள் (ஊர்தலாகிய) வருத்தம் பொறுக்குமோ.

## 42

மீன் கவரும் மீன்கொத்திப் புள் குளிர்ந்த கயத்தில் மூழ்கி எழும்போது அதன் வாய்அலகை ஒத்த நெடு வெள்ளூசியாற்றைத்துத் தழும்பு பரந்தமார்பில் அம்பேறிய அடையாளங்கள் பொருந்திய தம்மோடொத்த வீரரோடல்லது வேறு போர் குறித்தார் தம்மோடு தும்பை சூடாது பொரும் மாட்சியையும், பெரிய பனை மாலையையும் பெரிய வீரக் கழலையுமுடைய பெரும! நன்னுதல் கணவ! தலைமையுடைய யானையைக் கொல்லும் குட்டுவ! கூத்தர்களது பெருங்கிளை வாழவலிய நல்ல போரை வென்று, *இஞ்சியும் பூவும் கலந்து தொடுத்த மாலையைப் பூட்டிச் சாந்தும் புறத்தே தெறித்த (தன் களிப்பு மிகுதியால் தன்னை உண்டார் உடல்போல்) இருக்கையிலிருந்து ஆடும் கட்குடத்

---

* மது நுகர்வுழி இடையிடையே கறித்து இன்புறுதற்கு இஞ்சியும், மோந்து இன்புறுதற்குப் பூவுமாகத் தொடுத்த மாலையைக் கட்டுவர். அவ்வாறு இன்புறுதற்குச் சாந்தும் புறத்தே தெறிப்பர்.

திருந்து தீஞ்சுவை விளைந்த மகிழ்ச்சி தரும் மணி நிறக்கட்டெளிவை (உனக்கெனப்) பாது காத்துவையாது சுரப்பை. சுரந்து நீ கொடுத்த ஆடுகின்ற அழகிய தலையாட்ட முடைய குதிரைகளை எண்ணின், உலகம்மருள அரசரை எதிர் நின்று பொருது கொன்று வெல்லுதற் பொருட்டு, நின் தேரைச் சுற்றிமானமுடைய வீரரோடு அரசர் துதிக்கப் பிரகாசிக்கின்ற மருப்புடையகளிறு. ஊருதலால் உலகை மூடிய தெளிந்த நீருடைய மிகுந்த பெரிய திரைஉடைய கடலின் வெள்ளிய தலையுடைய துளிகள் சிதறிக்குளிர்ந்து வரும் நீரிற்பலவாகும்.

# 43

உரல்போற் பெரியகாலும் பிரகாசிக்கும் கொம்பும் போர்செய்யும் கையுமுடைய மதயானைபுகின் அதனைச் சூழும் பிடிகளை, கவரிபோலும் கரியகூந்தலை முடிந்த கொண்டையும், ஊசலாடும் அழகிய ஆபரணங்களும் பூண்ட மகளிர் *எண்ணின் அவை எண்ணுக்கடங்கா, எண்ணுக்கடங்காத பிடிகளுடையதும் கடவுளுக்கு இருப்பிடமாகியது மாகிய உயர்ந்த பாறைகளுடைய நெடிய இமயமலை வடக்கும் குமரிமுனை தெற்கும் ஆக இடை இட்ட நிலத்திலுள்ள அரசரின் பலநாடுகளை, முரசுமுழங்கும் பெரிய போர்க்களம் ஆர்ப்பெழப் பழைய கவினழித்த, சமரிடத்துக் கொலைத்தொழில் புரியும் தானையுடைய குட்டுவ! பெரிய மூங்கில் வாடும்படி பெரியமழை ஒழிப்பவும், மலைகள் மிகவறளவும், சூரிய வெப்பம் மிகுதலால் வறட்சியற்ற வற்கடகாலத்தும் (நீர்மிகுதியால்) செல்லற்கரிய பேராற்று

---

* சங்கு பற்பம் என்றும் தொகைகளால் எண்ணின். மகளிர் பிடிகளை எண்ணுதல் தங்கள் நடை ஒப்புமை நோக்கி. தங்களின் நடையோடொத்தலின் பெண்கள் பிடிகளை எண்ணுவார்கள் என்ப

நெடுங்கரையை, அதிரும் முழக்கம் முழங்கிப் பெயல் சிறந்து ஆரவாரமுடையவானம் சொரிந்த நீர், சிறப்புடைய ஏரைப் பூட்டுவோர் கொன்றைமலையும்படி உடைக்கும். வானப் சொரிந்த நீர்பேராற்று நெடுங்கரையை உடைப்பது போல் (உனக்கெனப்) பாதுகாத்துவையாது அடைந்தவர்கள் உண்ணும்படி கொடுத்து, நட்பினர்மகிழ ஆபரணங்களை மிகவும் நல்கி, 'கின்னரப்புள்ளின் இசை எழுகின்ற சிறகினைத் தோற்பித்த இனிய குரற்பாடும் விறலியர் பல பிடிகளைப்பெறுக'; 'மெல்லிய வாகையின் முடியில் உழிஞைசூடும் வெற்றியுடைய அச்சம் விளைக்கும் சிறந்த கொள்ளையிடும் மறவர் கொல்யானைபெறுக' என்று கூறிப்பகை மேற்கொள்வை. ஆதலின் பகைவரும் தாங்காது மந்தகதியுடைய ஆடற்கேற்ற முழவை முழக்கிப் புகழ்ந்த தொலையாத கல்வியுடையை. கள்ளோடு உண்ணற்கு நிணம் சுடும்புகையோடு நெருப்புச் சினம் நீங்காது. நிரம்புதல் ஒழியாது கோக்காலியில் நிறைந்து நெடிது நேரம் இராதகுடத்தில் கூத்தர் உண்ணுந்தோறும் நிறைக்கப்படும் கள்ளின் கொடையுடைய வேந்தே! நின் ஆரவார மிகுதியால் நின் செல்வத்தின் பெருமையையுங் கண்டேன்.

## 44

மெல்லிய* உழிஞைக்கொடி சூடிய தான் வெல்லும் போருடைய *அறுகை, தூரத்தே இருந்தானாயினும் அவன்தான் எனக்கு நட்பு எனச் சொன்னாய்; சொல்லி அவன் இடம் விட்டு ஓடி மறையுந் துன்பத்தினின்றும் நீங்கும்படி களையாத போரிடத்து கொலைநடந்தாற்போன்ற (அறுகையை முற்றுகை இட்ட †மோகூர் மன்னனின் அரண்களைக் கடந்து முரசைக் கவர்ந்து, வஞ்சினம் ஒழித்து, வேம்பை வெட்டி முரசுசெய்யச் சிறுதுண்டுகளாடி ஏற்றிய,

* முற்றுகை இடப்பட்ட அறுகை † பழையன்

பலயானைகளை அவன் மகளிரின் மயிரால் முறுக்கிய கயிற்ஞல் பூட்டிய வண்டியைச் செலுத்தி வானத்தைத் தடவும் வெற்றிக்கொடி தேர்மீது அசைய நிலம் பெயர்ந்தாற் போலும் ஆரவாரத்தோடு போர் வென்றனை. வென்று (அரிதிற்) பெற்ற பெரும் பொருள்களாயினும் அவற்றை உனக்கெனப் பாதுகாத்து வையாது (பரிசிலாளர்க்கு) வீசி நீயணிந்த ஆபரணங்களையும் கொடுத்தலோடு அமையாது உன் அழகையும் களைவேமென்று அதனைக் களைய அறியாத கசடில்லாத நெஞ்சமும் ஆடுநடையுமுடையதலைவ! எல்லா வீரரும் சொல்லிப் புகழ்தற்குக் காரணமாகிய நின் திருமேனியை பாடுமகளிர் காண்பாராக. கொழுவிய பசிய இறைச் சித்துணியைப் போட்ட இடத்தைமறந்த கொண்டையுடைய கூகையை அதன் பெடையாகிய குரால் கவற்றும்† இடுகாட்டில், முரசுடைய அரசர் பலரை ஓட்டி கடல் சூழ்ந்த உலகை ஆண்டு (நின்னோடு பொருது) இனிது மாண்ட மன்னரை இட்டுப் புதைத்த ‡வன்னிமரமுடைய மன்றத்தை(ஆடுமகளிர்) காணுதொழிவாராக.

## 45

பொன்னிறப் பூவுடைய தும்பைபோன்ற பொறிகளுடைய அம்பறாத் தூணியில் பாம்பு புற்றில் அடங்கியிருப்பதுபோன்று ஒடுங்கியிருக்கும் அம்பும், துவளுகின்ற வில்லும் துவளாத நெஞ்சும், களிற்றை எறிந்து முரிந்த கவர்பட்டவேலுமுடைய வீரர் நெருங்கிய அகன்ற இடத்தின் நடுவே வீற்றிருக்கும் ஏழுமுடியாற் செய்த ஆரம் பூண்டசேரல்! பாதலத்தே செல்லும் அகழிகளையும் பல

---

† கூகை பெடையோடு இருந்து அழும்.

‡ காட்டில் வன்னிமரமுடைய இடம். பிணத்தோடு செல்வோரெல்லா மிருந்து மன்றுபோறலின் அது மன்றெனப்பட்டது.

மதில்களையுங் கடந்து சென்று உட்புறங்களை அழித்து உண்டநாட்டின் நடுவேயுள்ள பிணங்கள் நிறைந்த கோட்டையின் மதிற்கதவங்காக்கும் திரண்டகணையமரம் போற்றிண்ணிய, நிலத்தைக்கவர எழுகின்றதோளை உயர ஓச்சித்துணங்கையாடுவை. முகில் கொள்ளக் குறைவு படாததும் (ஆற்று) நீர்புக நிறையாததும் காற்று அடித்த லால் முழங்குகின்ற திரை எழுகின்றதும் நிறைந்த மேகம் பிரகாசிக்கின்றதுமாகிய குளிர்ந்த கடலில், பிரகாசிக்கின்ற மணிபோல மின்னும் வேல்எறிந்து (கடலிற் புகுந்து ஒரு வினை செய்தற்கு அரிதென்பதனை) மறுத்தோர் யாருளர். முள்வேலி இடுதல் அறியாத பாசறையுடைய பகைவர் வில் லின் விசையை அடக்கிய வலிய (அம்பு படின்தளராது பிறர்க் குப் பாதுகாப்பாகும்) வெண்மையாகிய (எருமைத்) தோற் கேடகம்போன்ற படையுடைய மன்னர் நின்முன்னுமில்லை (பின்னுமில்லை)

## 46

ஆபரணங்கள் அணிந்தோரும், குழை அணிந்தோரும் பெரிய தண்ணியமாலை சூடினோரும், சுடர்விடும் பிரகாசம் பொருந்திய வளையணிந்த முன்கையினரும், (பிறவொளிகளி லும் மேம்பட்ட ஒளிவிடும்) திருமணி இலங்குமார்பினரும், வண்டு படுகூந்தலால் முடிபுனையுனருமாகிய மகளிர் நரம்பு அமைந்த பெரிய பாலையாழைத்திருத்தி உயர்ந்த முறைமை யின் உழிஞைப் பண்பாடுவர். அதனால் இவர்களைப் (பரிசில் கொடுத்துப்) பாதுகாப்போர்க்கு மகிழ்ச்சி சுரக்கும். பகைவ ரோடு பொருங்களத்தில் தேர் செல்வதற்கு அரிதாக படை குறுக்கிட்டுநிற்கும் அரிய இடங்கள் பலவற்றிலும் செல்லும் ஒலி செய்யும் (தேர்) உருளைகள் செல்லுகின்ற வேகத்தில் யானைப்போருக்கு அஞ்சி ஓடி மடிந்தோருடைய எண்ணி றந்த தலை நொறுங்கப்பலபோர் வென்றவனும், கொல்லு கின்ற களிற்றி யானைகளையுடையவனும், ஒலிக்கின்ற கடல் கலங்கவேலிட்டு, உடைகின்ற திரைகளுடைய கடற்பரப்

பில் வாழ்வோர்க்கு அரணாகிய கடலின்வலியழித்த வெற்றிப் புகழுடையவனுமாகிய குட்டுவனைப் பாடிக் கண்டோர் செல்குவமென்னார் (நிற்கவெனக்கருதுவர்).

## 47

குட்டுவன் வென்று (செல்வம்) நிறைந்தான்; வெல்லுந்தோறும் பரிசிலர் களிறு பெற்று (செல்வத்தால்) நிரம்பினர். மலைமீது பாயும் அருவிபோல் அசையும் வீதியிடத்துள்ள மாடத்து, நெய்கவர்ந்து எரியும் திரிக்குழாயுடைய கால்விளக்கில் பெரிய சுடர் நின்றெரிய, ஆடல்பாடலுக்கேற்ப நூல்களிற் சொல்லப்பட்ட அழகு நிரம்பிய விறலியர் ஆடும் பழைய நகரின் எல்லைக்குள் அவன் உரை நிறைவுடையது.

## 48

பசிய பொற்றாமரை பாணர்க்குச் சூட்டியும், ஒள்ளிய நெற்றியுடைய விறலியர்க்கு மணிவடம் பூட்டியும், கெடாத பல புகழை நாட்டியவனும், நீரிற்புகுந்து கடலோரடு பயின்றவனுமாகிய குளிர்ந்த துறையுடைய பரதவ! கடலிடத்துப் போர்செய்து அரிதிற்பெற்ற பொருளை, மனங்கொள்ளாப் பாடலையுடையதரம்போதாதார்க்கும்எளிதாகக் கொடுக்கும் பேதை இவனென இழித்துக் கூறற்கேற்பக், கைவல் இளையர் அடைவே தத்தம் கையைச் சுட்டி நிரைக்கும்படி, இரவலரிடத்து வணங்கிய மென்மையையும், பகைவரை (வணங்காத) ஆண்மையையும், பகைப்புலத்து ஒலியுடன் எரிகின்ற நெருப்புச் சுவாலித்தலின், பெரிதும் இதழ் அழகு அழிந்த மாலையோடு சாந்து புலர்ந்த பல பொறிகளையுமுடைய மார்ப! நின்புகழ், நின்மலையிற் பிறந்து நின்கடலில் நிறையும் ஆறு மலியும் புனலில் இனிதாகக் கலக்கின்ற இனிய புது நீரில்,

விழாக்காலத்தே வேனிற்காலத்து மனையில் வைகாது பொழில்களிலே வதியும் பெரிய செல்வம், அழகுடைய இல் வாழ்க்கையில் மேலான சுற்றத்தோடு உண்டு* இனிது நுகரும் புனலாடற்கு வந்ததிரள் தங்கும் காஞ் சிமரங்களுடைய பெருந்துறை மணலினும் பலவாக வாழ் வதாக.

புகழ், நீரில் புனலாடற்கு வந்த திரள்தங்கும் துறை மணலினும் பலவாக வாழ்வதாக என வினை முடிவு செய்க.

## 49

களிறு பரந்து செல்லவும், கதியுடைய குதிரையை வீரர் வேண்டியளவிற் செலுத்தவும், பிரகாசிக்கின்ற கொடியசையும் தேர் சுழன்று திரியவும், மாற்றார் படையில் வகுத்து நிறுத்தின கைகளைச் சென்று கவரும் கடிய தூசிப் படையும், தாம் வெல்கின்ற போரையும் உடையராகிய வேந்தரும் வேளிரும் ஒருவர் போல பலரும் வஞ்சினங் கூறி (மோகூருக்குத் துணையாவர்). அங்ஙனம் பெற்ற வலி யாகிய செல்வத்தாற் செருக்கி மொய்த்து வரும் மோகூரின் வெற்றிதரும் படைத்திரள் நிலைகுலையும்படி நெருங்கி இரத் தந் தொட்ட* சிவந்த கையுடைய மறவரின் செங்குருதி, மழைக்கால வெள்ளம்போல நிலத்திற் பரந்து செல்லவும், படுபிணங்கள் குவியும்படி பல இடங்களைப் பாழ்செய்து கொடிய கண்ணுடைய முரசொலிக்கவும், செல்வம் அறும் படி கொள்ளை அடித்தும், வாழுநர் பலர் இறக்கவும், கரிய

---

* சுற்றத்தோடு உண்ட லன்றிச்செல்வமுடையார் அச்செல் வத்தாற் கொள்ளும் பயன்களெல்லாம் கொள்ளும்.

*பகைவருடைய வில் வேல் முதலியவற்றைப் பறிக்கின்ற காலத்து அவருடைய உடலுகும் குருதியை அளைந்து சிவந்த கை

வேம்பறுத்த பெரிய சினமுடைய குட்டுவனைக்கண்டு வருதற்கு யாம் செல்கின்றோம். அசைகின்ற கூந்தலும் ஒள்ளிய சாயலுமுடைய விறலியீர்! நீயிரும் வம்மின், யாமும் செல்வேம். இசைப்பாட்டில் வல்ல வாழ்க்கையுடையநும் சுற்றம் இனிது உண்ணும்.

## 50

பெரிய மலையிடத்து முழக்கமென்று மான்கூட்டம் அஞ்சும்படி மிக உறைந்த ஆலாங்கட்டி காற்றோடு கலந்து சிதறுதலால், கரும்பு வளரும் கழனியுடைய நாடுகள் செல்வம் பொழியும். (இவ்வகைச்) சிறப்பமைந்த உலகைக்காத்து சிவந்த கிழக்குத் திசையாகப் பாயும் காவிரி, அன்றியும் பூமியிற் பாக்கும் ஆன்பொருநை, குடவனாறு ஆகியமூன்றுஞ் சேரக்கூடிய கூட்டம் அனையை. பெரும! கொல்களிறுகிய வலிய வில் (உமிழும் அம்புகளாகிய) நீர்த்துளியைச் சிந்த, பெரியபழைய உலகில் வேலாகியமீன் பிரகாசிக்க, பரந்த பணையாகிய முழவோசையைக் கேட்ட (தம்பகையை வெருவி, உன்னுடன் நட்பாகிய) வேந்தர்க்கு அஞ்சத்தக்க புனலாகிய தார்ப்படை அரணாகும். மலையிடத்தவும், கடலிடத்தவும் பிற இடத்தவுமாகிய அரண் அமைந்த போரைக் கடந்து, கோபித்த வீரர் மலிந்த பக்கத்தே உள்ள நாட்டை அகப்படுத்தலால், நல்ல புகழமைந்த அகன்ற இடத்தை விட்டோடிய பகைவரின் கோபமறும்படி தார்ப்படையை நிரப்பினை. ஆதலின், யான் நின்னை ஒன்று கேட்கின்றேன்; சாந்து புலர்ந்தபின் தொய்யில் எழுதி (பல) வகை வனப்புற்ற மார்பாற் பிணிப்புண்ட, (நீ)தேனீ ஒலிக்கும் மெல்லிய கூந்தலுடைய மகளிரின் மெல்லிய அணையில் வதிவை; வதிந்து கொல்கின்ற வருத்தங்களைந்த மார்பைக் கவர்கின்ற முயக்கத்தாலே இராப்பொழுதைப் பயன்கொண்ட மெல்லிய

உறக்கம் கொள்வை; பகையின் வெப்பத்தால் பாசறையில் இருந்து வருந்தி அரிதிற் பெற்ற சிறு துயில் பொருந்ாத, வாத்தியங்களினிடையே சங்கு முழங்குகின்ற செல்வத்தை யுடைய நின்கண்கள், விரிய எவ்வளவு காலஞ் செல்லுமோ?

## ஐந்தாம் பதிகம்

வடவர் அஞ்சும் வான்தோயும் வெற்றிக்கொடியுடைய குடநாட்டார் அரசனுகிய நெடுஞ்சேரலாதற்கு சோழன்* மணக்கிள்ளி ஈன்ற மகன். பத்தினிக் கடவுளுக்குக் கற் கொள்ளவேண்டி, காற்றடிக்கின்ற காட்டுக்கூடாக அம்பைப் போற்சென்று, ஆரிய அரசரை வீழ்த்தி, பல அருவிகள் விழுகின்ற கங்கையில் மூழ்கி, பசுக்களைக்கன்றோடு கொண்டு, வில் அம்பு சொரிதல் மாறாத இடும்பிலில் தங்கி, புலிகளைப்போன்ற வீரரைக் கொன்று, நெய்தல் பூத்துள்ள வியலூரை அழித்து, அக்கரை அடைந்து கொடுகூரை வென்று பழையன் காக்கும் கருஞ்சினையுடைய வேம்பின் அடியை வெட்டி, பிரகாசிக்கின்ற ஆபரணங்களைக் களைந்த பெண்களின் பலகரியகூந்தலாற்றிரித்த கயிற்றால் யானையை வண்டியிற்பூட்டி, (நேரி) வாயிலில் தங்கி, சோழர்குடியி லுள்ள ஒன்பது இளவரசரைக் கொன்று, நிலையாகிய போரின் ஆற்றலை அறுத்துக் கெடுதற்கரிய தானையோடு, கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைக் கூத்தின் விகற்பங் களை அறிந்த காசறு செய்யுட் பரணர் பத்துப் பாட்டுப் பாடி னார். பாடிப் பெற்றபரிசில்: உம்பற்காட்டு வாரியையும், தன்

---

* மணக்கிள்ளி என்பது ஒரு ஆணுக்குரிய பெயராகக் காணப் படுகிறது. ஆகவே இவ்வடி வேறுவகையாக இருத்தல்வேண்டும். சிலப்பதிகாரத்தில் சேரலாதற்குச் சோழன் மகளீன்றமைந்தன் செங்குட்டுவன் என்று காணப்படுகின்றது.

மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான்க்கோ கடல்பிறக் கோட்டிய செங்குட்வன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான். பிறக் கோட்டுதல்—பின் னுக்குச்செல்லும்படி ஓட்டுதல்.

---

## ஆரும் பத்து

## 51

நீ, அசைகின்ற அகன்ற நீர்ப்பரப்புக் கலங்கும்படி காற்று அடிக்க, விளங்கும் பெரிய திரை இடிபோல் முழங் கும் கடற்கரைச் சோலையுடைய (உன் நகருக்கு) மேற்குப் புறத்துச் சென்று, கூவலிற்படியும் விசாலித்த தாளுடைய நாரை, குவிந்த பூங்கொத்துகளுடைய கோங்கின் கிளை களிற்றங்குவதும், வண்டுகள் தங்கி உறைவதும், அடும்பங் கொடி நெருங்கிக் கரையில் அடைகின்றதும், நண்டு ஆடிய வடுவை காற்று நுண்ணிய மணலை அடித்துமாற்றுவது மாகிய வலிய கரிய பனைகளுடைய பொழிலில்தங்கி, ஒப்பனை யாற் பொலிவு பெற்று, உலாவி அசைந்து ஆடுகின்ற மெல் லியசாயலுடைய விறலியரின தெய்வமேறிய விகாரத்தால் ஏற்பட்ட நடுக்கம் போல் தோன்றி, இடங்கள் தோறும் அரியமணியுடைய பாம்பு திரியும் இமயமலையும், சங்கு குழுறும் பனிக்கடலும்* கிழக்கும் மேற்கும் கடலும் ஆகிய இடத்தே உள்ள அரசரும் பிறரும் சேவித்தற்குப்

---

* குமரி முனைக்குத் தெற்கேயுள்ள கடல். †நீ மேற்குப் புறத் துச் சென்று பொழிலில் தங்கி ஒப்பனையாற் பொலிவு பெற்று, உலாவி அசை...........இமையமலையும்.........இடத்தே உள்ள அரசரும் பிறரும்.. ...பந்தரை வேய்ந்தாற்போல்......தூக்கி விற லியர் பாடல்மிழற்ற விநோதத்தில் கூடி இருந்தனை என வினை முடிவு செய்க.

பொருந்தின பந்தரைவேய்ந்தாற்போல் முறுக்கவிழ்ந்த வளவிய நெய்தற் பூவாற்றொடுத்த மாலைகளை ஈரமாகிய தேன் நாறும்படி தூக்கி, சுடர்நுதலும், மெல்லிய சாயலும், வாள் நகையும், பிரகாசிக்கின்ற பற்களும், அமிழ்தம் பொழிந்து சிவந்த வாயும், அசைகின்ற நடையுமுடைய விறலியர் பாடல்மிழற்ற புறத்து வினையின்மையின் விநோ தத்திலே கூடி உறைந்தனை. நீ அவ்விநோதத்திலே நீடி உறைதல் அறியாது 'பிரகாசிக்கின்ற வேலுடைய அண்ணல் மெல்லியன் போலும்' என நின் பெருமை உணராதோர் எண்ணுவரோ. நீதான் கோபமுடைய அரவோடொக்கும் பகைவரைக் கடுக அழிக்க வேண்டும் நிலைமையில், மழை தவழும்பெருங் குன்றத்து அவ் வரவி வினை அழிக்கும் உரு மேற்றினை ஒப்பை (அவ்வாறு விரையச் செய்யும் நிலைமைக் கண் நினக் கேற்ப) நின் படை வழி வாழ்நரும் காலாட்கள் மேற் செல்ல எதிர்க்கநேரின் யானைகளது கோடுகளை வெட்டும் வாளுடைய வலியர்களா யிருப்பர். அவ்வாறு நீ அழியாது மாறுபாடாற்றிப் பொருதழிக்கும்வழி நீ புனைந்த வீரம்பொருந்திய வெள்ளிய பனை மாலை உதிரம் தெறித்து நிறம் பெயர் தலின் அதனைப் பருந்து கவர்தற்கு விரும்பி வட்டமிடும்; வட்டமிட, நின்முன்னர் ஒலிக்கும் பெரிய கண்ணுடைய தண்ணுமையின் கண்ணை நின்னெதிர்நின்று மாற்றார் எய்த அம்பு கிழித்தலால்; தண்ணுமை கொட்டும் இளைஞர் தண் ணுமை கொட்டா தொழிவர்; தடுத்தற்கரிய சீற்றமுடைய பெரிய கூற்றம் வலைவிரித்தாற் போல களத்தில் எதிர்த்த மாற்றார் படையை யெல்லாம் ஒன்றாகக் கொல்லக் கருதி நோக்கின நோக்கினையுடையை. நெடுந்தகாய்! செரு வகத்து நீ அவ்வாறு கடியுந் தன்மையுடையை.

## 52

அரிய பண்டங்களைக் கொண்டு வருவோர் நீரிடத்தே மிதக்கவிட்ட பெரிய ஆரவாரமுடைய வங்கம் திசைகளிற் றிரிவதுபோல், கொடி அசையும்படி நிற்கும் கொல்கின்ற யானைகள் நெருங்கிச் செல்ல, தெள்ளிய ஓசையுடைய மணிகள் அசையும் நெடிய தேரைப் பகைப்புலத்தே பரப்பி, மைபூசியமிகப் பெரிய பரிசைகளையும், கவசத்தையும் மதியாது வாள் வேல் முதலியவற்றைத் தாங்கிப் போருக்கு முன்னணியிற் செல்லும் கொடிய கண்ணுடைய வீரர், பகைவர் ஓய்வின்றிப் போர் செய்தலின் வீரசுவர்க்கம் அடைவர். இவ்வாறு பலர்பட நல்லபோர்வென்ற இடியோடொத்த விசாலித்த நின்கை இரப்போர்க்குக் கவிதலல்லது இரத்தற்குக் கவிதல் அறியா எனக்கேள்வியுற்றேம். அசைகின்ற மாலையும், பரந்த தேமலும், குளிர்ந்த இமையும், மழைக் கண்ணும் பேரழகு முடையள் நின்தேவி. சுடர்விடுகின்றதும், செல்வம் விளங்குகின்றதுமாகிய பாண்டில் விளக்கு எரிய, முழா ஒலிக்குந் துணங்கைக் கூத்துக்கு, முக்காரமிடும் வலிய ஏற்றைப்போலத் துணையாகத் தழுவித் தன்னைச் சேவிக்கும் மகளிரொடு கைகோத்து நீ குரவையாடிச் செறிதலைக்கண்டு, நின்தேவி வருந்துவள். வருந்திப்பிரகாசிக்கின்ற பூவிதழை ஒத்த சிறிய அடியிடத்தனவாகிய கிண்கிணிகள் சிறிய பரட்டை அலைப்ப, கொல்கின்ற புனலிலுள்ள தளிர்போல நடுங்கி நின்று நின்னை எறிய ஓங்கிய சிறிய செங்குவளையைத்தா என நீ இரப்பவும் ஈயாளாய் அதனைக்கொண்டு, நீ எமக்கு யார்? எனக் கூறிப் பெயர்வாள். அவ்வாறு இரந்து நீ பெறாது, அவளைச் சுடுதியிற் கோபித்த நோக்கத்தோடு, அதை அவள் பாணின்றும் பிரித்துக் கொள்ளமாட்டாயாயினை. அவ்வாறு அதனைக் கொள்

ளமாட்டாத நீ, அகன்ற பெரிய வானில் பகற்பொழுதிற் செல்வோரைச் சுடும் கதிர்விடும் கோபமுடைய ஞாயிற் றைப்போன்ற நிறமுடைய வான்றோய் வெண்குடை வேந்தர் தம் எயிலைப் பகுத்துக் கோடல்யாங்கு வல்லையாயி னாய். நின் கண்ணி வாழ்வதாக.

## 53

நீ வென்று (எங்களுக்கு) ஆபரணங்களைத் தருதற்கு, விரும்பிய இடத்தே தங்கியபோது (தோற்ற) வேந்தர் 'எமக்கும் போதியளவு கொடுத்தனை' எனக்கூறிச் சோராத வருவாயுடைய நாடுகளைத்திறையாகக் கொடுப்பர். அதனைப் பெற்ற நீ அவர்க்கு அருள்புரிவை. சினம் பொருந்திய தலைவ! உயர்ந்த மலைகளுடைய உலகில் கடலாற்சூழப்பட்ட பழைய புகழமைந்த நின் மூதூரிடத்தே செல்குவையாயின் (செல்லும் நெறியின்) வளைந்த வழியாற் செல்வாயாக அப் படிச் செல்லுதற்குக் காரணம் யாதெனில், கணையமரம் புறத்தே சேர்க்கப்பட்டதும் இரும்புத்தகடுகளாற் பிணிக்கப் பட்டதுமாகிய கூட்டமாகிய மரங்களை நிறுத்திச் செய்யப் பட்ட நிலையின் வாயிற் கதவுகளைக் காணின், மதம்பாயும் சுவடுடையதும், வலிய கையைத் தூக்கி வேங்கையைவென் றதுமாகியநின்களிறு பொறியுடைய புகர் நெற்றியில்உயர்ந்த கையைச் சுருட்டித் தோட்டியை விலக்கி, உயர்ந்த வெற்றிக் *கொடி அசையத்தாங்க மாட்டாது. தாங்கவேண்டுவதேல் சிவந்த புள்ளிகளிட்ட சிலம்போடு அழகிய தழைகள் தூங் கும் எந்திர அமைப்புடைய அம்புக்கட்டுகள் தூங்கும்வாயி

---

*ஈண்டு பொரு வீருளீரேல் நும் காலிற் கழலினையும் அரை யிற் போர்க்குரிய உடையினையுமொழித்து இச்சிலம்பினையும் தழை யினையு மணிமினென... அவரைப் பெண்பாலாக இகழ்ந்த வாறென்க"

லும் கொலைத் தொழிலுடைய வலியமுதலை திரியும் ஆழ்ந்த அகழும், வானத்தை முட்டும் வளைந்த அழகிய மதிலு முடைய, பொருந்தாத பகைவர் முனைகெடப் பொருது நின்றுக் கொண்டு பிறர்க்குக் கொடுக்கப்பட்ட அரசர்[1] எயில் முகத்து (அவ்யானைகளைச் செலுத்துவதல்லது) நின்முன் னோர் ஓம்பிய எயில் முகத்துச் செலுத்துதல் எதற்கு?

## 54

பெரிய பாசறையின் நடுவில் கறங்கும் ஒலிக்கின்ற கண்களையுடைய முரசின் ஓசை பாசறை எங்கும் படர்ந்து படையை ஏவி ஒலிப்ப, தண்டாயுதத்தையுடைய புகழமைந் தவலியோர் இளையர்களை அணிவகுப்புக்கு ஏவித் தாமும் ஏவல் செய்யும் பகைவரது* யானைப்படையைக் காணின் நில்லாததானையுடைய தலைமையை உடையோய்! நின்னை வள்ளியனென்று யாவரும் கூறுதலானே நின்னைக் காண வந்தேன். யான் உள்ளியதனை நீ முடிப்பாயாகவேண் டும். நின் கண்ணி வாழ்வதாக. வீங்கிய கணுவுடைய பெருத்த மூங்கில் போன்ற பெரிய தோளும், உயர்ந்த அழகிய குளிர்ந்த கண்ணும், பூந்தொழிலமைந்த துகிலுடுத்திய அரையும், தேனூறுகின்ற கூந்தலும், பிரகாசிக்கின்ற ஆபரணமுமுடைய விறலியர் நின் வீரத்தைப் பாடவும், இரவலர் வருத்தம் நீங்கவும் நாள் தோறும் சிறந்த நல்ல ஆபரணங்களை வரைவில்லாது வீசுவை. நீ அத்தன்மையை ஆகலான், என்போலும் இரவ லரது ஆக்கத்தின் பொருட்டுச் சிறிது காலமும் இவ்வுலகத் தினின்று உயர் நிலை உலகத்திற் செல்லாதே இவ்விரு நிலமருங்கிலே நெடுங்காலம் நிலைபெறுவாயாக.

---

* காலான் முதலாயன வற்றைத் தரமல்லவென்று கழித்து நின்று யானைகாணின் நில்லாது செல்லும்தானை.

## 55

பெருமை தங்கியவளது கணவ! புலவர்களது வேந்தே! நின்னை விரும்பி வந்தேன் ; கொல்கின்ற போரை விரும்பும் கொற்றவ ! இனிய ஓசையுடைய திரை ஒலிக்கும் கடலிடத்து வந்த நல்ல பண்டங்களாகிய செல்வம் கிடக்கும் பண்டசாலைகளில் தாழை கமழும் கரையையும், பெரிய துறையையும், தண்ணிய கடற்கரைத் தோட்டங்களையுமுடைய நல்ல நாட்டின் அரச ! அரைத்துக்கரைத்த மையால் தன்னிறப்புக்க செவ்வூன்தோன்றாத அவரை துவரை முதலியவற்றின்சுவையையும், வெண்ணிற ஊனையும் சோற்றுக்குப்பதில் உண்ணும் மறவர்கவசமே ! குடநாட்டவர் கோவே! கொடித் தேரண்ணல்! இரவலர் வாராராயினும் தேரைப் போக்கி அவரை அதில் வரப்பண்ணி அவர்க்கு உணவு நல்கும், விருப்பம் மிகுந்தவார்த்தையையும், புகழையுமுடைய தோன்றல்! பெரும! தினந்தினம் அகன்ற இடத்திலுள்ளார் தார்ப்படை அழிந்து அலற நீண்டமலை அடுக்குகளையுடைய நாடுகளைக்கைக்கொண்டு பொருது சினந்தணிந்த போர் அறைகூவும் ஆண்மையும், எதிர்த்தவர்களைச் சிதைத்த ஒள்ளியவாளும் உடைய உற்சாகம் பொருந்திய குரிசில் ! நின் வாழ்நாள், பல ஆண்டுகளாக வேண்டிய காலத்துப்பெய்து உலகைக் காக்கும் முகிலை ஒத்து, எஃகின பஞ்சுபோல வெளுத்துப் பொங்கி மேலெழுந்து வானைச்சேர்ந்த (வெண்) முகிலை ஒவ்வாது ஒழிவதாக.

## 56

வெற்றி முரசம் ஆரவாரிப்ப உயர்த்தியவாளும், இலங்கும் பூணும், பொன்னுழிஞையும் உடையனாய், அறியாமை மிகுதியாற் பகைத்துப் போர்க்கெழுந்த மாற்றா வேந்தர் தமதுமெய்மறந்த வெற்றிச் செல்வம் மாய்ந்து ஒழியும்

போர்க்களத்து ஆடுங்கோ, விழாக்கொண்டாடும் பெரிய நகரிடத்து கூத்தர் முழவின்முன் ஆடவல்லானல்லன். அவன் கண்ணி வாழ்வதாக.

## 57

இளைய புதல்வர் அளித்த வளம் பொருந்திய சிலம்பும், அடங்கிய கொள்கையும், ஆன்ற அறிவும், தோன்றிய நல்ல புகழும் உடைய ஒண்ணுதன் மகளிரது அழூத கண்ணினும் இரவலர் வருத்தத்தை அஞ்சும் காத்தற்றொழிலை எதிர் கொள்வோனை,* சிலவளைகளை அணிந்த விறலி, பாணர் கையிலுள்ள இசையமைந்த பாலைப் பேரியாழின் நரம்பைத் திருத்தி தழிஞ்சிப் பாடல்களை இன்னிசையாற்பாடி வரக் கண்டோம். மெல்லிய வழியிற் சிறியஅடிகளை ஒதுக்கிச் செல்வோமோ. அப்பாதுகாப்பை எதிர் கொள்வோனாகிய துணங்கையாடிய வலம்படு கோமான் (இப்போதுதான் அவ்வெதிர் கோட்டிற்கேற்ப) வருவாயினையுடைய குறைவுபடாத வலியுடைய மறவர் வலிசாயபெரிய பனைமாலையொடு பெரிய கழல் சிவப்பக் குருதிபனிக்கும் புலால் நிறைந்த களத்தோனாயிருக்கின்றான்; காண்பாயாக.

## 58

வெள்ளியபனந் தோட்டின்மேல் அழகிய குவளைப் பூக்களை அணிந்தோரும்வாளின்வாய் உண்டாக்கிய மாட்சிமைப்பட்ட வரியாகிய தழும்பு உடையருமாகிய மறவர், கொலை புரியும் படைக்கலங்களைத் தாங்குவர். தாங்கி 'இன்று இனிது உண்டனமாயின் நாளை மண்ணினாற் செய்த

---

* பெதும்பைப் பருவத்தினர் பல்வளையிடுவர். சில்வளை இடும் பருவத்தாளெனக் கூறியது அவள் ஆடல் முதலியதுறைக் குரியளாதல் என உணர்த்தற்கு.

வளைந்த மதிலைக் கடந்து உட்புகுந்தல்லது உண்ணமாட்டோ மென்று (தாங்கள் சூடிய) பொற் கண்ணிக்கேற்ற வினைபுரியும் வீரர் பெருமகனே! பொய் பேசுதல் அறியாத பிரகாசிக்கின்ற நாவும், எயிலை எறியும் வலியவில்லும், அம்பும், கவசமும் விளங்குகின்ற உயர்ந்த அழகிய மார்புமுடையசான்றோனாகிய வானவரம்பனை, கானகத்து, காற்றூடியின் ஓசைபோல் சிள்வண்டுகள் இருந்து ஒலிக்கும் பொருக்குடைய அரையும் சிறிய இலையுமுடைய பெரிய வேல மரங்கள் வளரும் புல்லிய புலங்களை வித்தும் வலிய கையுடைய வினைஞர் தம் கலப்பை சென்ற கொழுவழி மருங்கில் அசைகின்ற கதிருடைய மணிகளைப் பெறும் அகன்ற இடமுடைய நாட்டையுடையான் என்று சொல்லுவார்கள். (அவன் அவ்வாறு செல்வக்குறையிலனாதலால், அத்தரத்திற் கேற்ப நமக்கு வேண்டுவன தருதலிற் குறைவுடையனல்லன்; வந்தமைக்கேற்ப) விறலியீர் ஆடலைக்குறையறச் செலுத்துமின்; பரிசிலராயுள்ளீர் நீயிரும் அரும் கவிகளைப் பாடிக் கைவரப் பண்ணுமின்.

## 59

பகற்பொழுது நீளாது இரவு நீண்டு மாசித் தன்மை பெருகி, மாக்கள் குளிரால் உள்வளையும் மாதத்தில், குளிர்ந்த சுரவழியிற் செல்லும் பாணன் உவப்பவும், புல்லிய இருள் அகலவும், ஞாயிறு பல் கதிர் பரப்பிக் கிழக்குத் திசையிற் றோன்றியதுபோல, இரவலரது சிறு குடிகள் செல்வத்தாற் பெருக உலகம்தாங்கிய மேலான கல்வியுடைய வில்லோர் மெய்ம்மறை! செல்வர்க்குச் செல்வ! சேர்ந்தார்க்கரணம்! பல்வேறு வகைப்பட்ட அகன்ற இடத்தில் குவிந்து கிடக்கும், மலையிடத்தவும் கடலிடத்தவுமாகிய பண்டங்களைப் பகுத்து (இரவலர்க்கு) அளிக்கும்

முறையில் முட்டுறுது, அறம் புரிந்தொழுகும் விருப்பாற் சிறந்த வலிய பணை ஒத்த நின் தோளுக்கேற்ப மதியாது, எதிர்த்து வலியிற் குறையுற்ற பகைவர் பணிந்து பெருமை சிறந்த ஆபரணங்களைத் திறை இடுவராயின் நின் சினம் செல்லத் தணியுமோ? நின் கண்ணி வாழ்வதாக.

## 60

வண்டுகள் புறத்தே மூசவும் தீஞ்சுவை மாறுததும், அரம்போழமாட்டாததும், மரத்திற் பழுத்ததுமாகிய அழகிய சேறு அமைந்த முட்டைபோன்று பழுத்த பழங்கள் வழி செல்லும்மாக்கட்குச் செல்லுதலைத் தடுக்கும். (வழிசெல்வோர் அப்பழங்களை ஆய்வதில் நேரத்தைப் போக்குவர் என்றவாறு). இவ்வாறு மாறுத விளைவுடைய ஆறுத புதுவருவாயுடைய அவன், அம்பு தொடுத்தெய்தலின் மடிந்த வில்லைக் களைந்த மறவர்,* பொங்கு துளிகளுடைய திரை மங்குற் பொழுதொடு மயங்க வரும் கடலூதை பனிக்கின்ற உண்ணு நறவில் (நறவு என்னுமூரில்) மெல்லியலுடைய பெண்களின் கூட்டத்தினன். இனித்தானே, கொலைவினை மேவிற்று ஆகலால், தான் போர்த்தொழிலை மேவலன். பாண்மகளே! நாம் அவனைக் காணுதற்குச் செல்வேமோ; செல்லின் குறைவுறுது (நமக்கு வேண்டியவற்றை) வீசுவான்.

---

## ஆறும் பதிகம்

குடக்கோ நெடுஞ்சேரலாதற்கு, வேளாவிக்கோமான் தேவி ஈன்ற மகன் தண்டாரணியத்தார் கவர்ந்து சென்ற காட்டாட்டைத் தோண்டியிற் கொணர்ந்து கொடுப்பித்-

* மறவரது உண்ணு நறவு என முடிக்க.

துப், பார்ப்பார்க்குக்கபிலேயோடு குடநாட்டிலுள்ள ஒரூரை ஈந்து, வான வரம்பன் என்னும் பெயர் இனிது வழங்கப் பெற்று, மற்றைய வீரரைப் போரிடத்தே ஒடுக்கி, அரசரை ஓட்டி குழந்தையைக் காப்பாற்றுந் தாய்போலக் குடிகளைப் பாதுகாத்து, விருப்பஞ் சிறந்த நல்ல நெஞ்சுடைய ஆடு கோட்பாட்டுச் சேரலாதனை, செய்யுட் பாடும் அடங்கிய கொள்கையுடைய காக்கைபாடினியார் நச்செள்ளையார் பத்துப் பாட்டுப் பாடினார்.

பாடிப் பெற்ற பரிசில்: கலனணிக வென்று அவர்க்கு ஒன்பதுகாப் பொன்னும் நூறாயிரம் காணமும் கொடுத்துத் தன் பக்கத்துக் கொண்டானக்கோ. ஆடு கோட்பாட்டுச் சேரலாதனை முப்பத் தெட்டியாண்டு வீற்றிருந்தான்.

## ஏழாம் பத்து

### 61

புண்பட்ட வாய்போலப் பழுத்து விழுந்த பலாப்பழங்களினின்று மோடுகின்றதேன் நாறுங் காடும், வெற்றியுமுடையவனும், சித்திரத்தைப்போன்று அலங்கரிக்கப்பட்ட பாவையைப்போன்ற நல்லவளது கணவனும், பொன் போன்ற பூவும் சிறிய இலையும் புல்லிய அடியுமுடைய உன்னத்தை உடையவனும், பகைவர்க்கு வலியனுமாகிய எமது தலைவனும், பூசிப்புலர்ந்தசாந்துடையவனும், புலராத ஈகையுடையவனும், மலர்ந்த மார்புடையவனுமாகிய பெரிய கொடையையுடைய பாரி, முரசம் மண்ணிடத்தே கிடந்து காயவும் இரவலர் வருந்தவும், திரும்பிவாராத தொலைவிடத்தே சென்றான். ஒள்ளியவாளும், வலிய களிறும், சந்திரன் போன்று வெள்ளிய வேலுமுடையதும் வீரர் போர்செய்து புண்பட்ட மிகுதியால் புலால் நாறுகின்றதுமாகிய பாசறை

யின்கண், பாடினி முழவின் தாளத்திற்கு ஏற்பக்கையை அசைக்கின்ற விழாவைவலத்தநின்விநோத மகிழ்ச்சியின்கண், நீ ஈவாயாக என்று சொல்லி இரக்கவென்று வந்து சில புகழ்ந்து சொல்லுகின்றேனுமல்லேன்; அல்லது உண்மை யல்லாதனவற்றைப் புகழ்ந்து சொல்லுகின்றேனுமல்லேன். * ஈதற்கு இரங்காதும் ஈயுந்தோறுமகிழாதும் கொடுக்கின்ற பெரிய கொடையாளி என்று உலகம் கூறும் அப்பாரி குணங்களாகிய நல்ல புகழை நின்பால் தரவந்தேன்.

## 62

பல அணிகளைப் புனைந்து செல்கின்ற பல யானைக் கூட்டத்தோடும், முகில் என்று அஞ்சும்படியான மிகப் பெரிய பரிசைகளோடும், கூரிய கத்தரிக்கோலால் பிடரி மயிர் மட்டஞ்செய்தகுதிரைகளோடும், மதிலின் பக்கங்கள் அழியும்படி வளைத்து வந்து புறத்தே தங்கியதானை கொளு விய பசிய பொறிகளைச் சிந்தும் பிரகாசிக்கின்ற அழல், (உல கம் கடல் கொண்டு கிடந்த உகாந்தகாலத்து அக்கடல் நீரெல்லாம் வற்ற எறித்தற்குத் தோன்றும்) புதுமையோடு கூடி (அந்நீர் வற்றும்படி) பொல்லா மயக்கமும் பேரொலி யும் செய்து திரிகின்ற வடவைத்தீயின் வண்ணத்தைக் *கொள்ளுதற்குக் காரணமாய் நின்ற மிக்க வலிமையும், முற் றக்கற்ற படைக்கலப்பயிற்சியுமுடைய வெற்றிவேந்தே! புனல் அலை மோதுகின்ற அகழிடத்து மலைபோன்ற மதிலை அரணாகவுடைய அச்சந்தரும் விசாலித்தகையுடைய நின் பகைவர் (தம்மைக்) காக்கும்படி கூறிப் பணிந்து திறைதரு வராயின், மதுவருந்துவோரும், வலியகையுடையவரும்

---

* விருப்பும் வெறுப்புமின்றிக்கொடுத்தல்

* அழல் கொள்ளுதற்கு எனக்கூட்டுக.

அருவியிடத்துள்ள ஆம்பலைச் சூடிய தலையையுடையோரு மாகியதொழிலாளர், புல்லுடைய பெரியவெளியில்பலமாட்டு நிரைகளைப் பரப்பி மேயவிட்டு வள்ம் பொருந்தியவயலில் விளைந்ததும்,வைக்கோலுடனிரிந்துபரந்துகிடப்பதும், களத்திற்கடா விடுதற்றொழிலற்றதுமாகிய பொலியை காஞ்சி மரத்தின் கீழ் பொறுக்கிச் சேர்த்து, ஆடுகின்ற சிறகுடைய தேனீக்களை ஓட்டும் நின் அகன்ற இடத்தையுடைய நாடு புகழ் அமைந்தது.

## 63

நீ பார்ப்பார்க்கல்லது பணிதலை அறியாய். பணியாத உள்ளத்தோடு அழகு பொருந்திய நண்பினருக்கல்லது கண் அஞ்சுதல் அறியாய். வளைந்தவில்லாற் பொருகின்ற உனது மணங்கமழ்கின்ற மார்பை (நின்னோடு பொருவாரின்மையின்) நின்மகளிர் போகத்துக் கல்லது மலர் வித்தலை அறியாய். உலகம் மாறுபடும் காலமாயினும் சொன்ன சொற் பிழைத்தல் அறியாய். (இவை நின் இயல்பு.). இவையேயன்றி சிறிய இலையுடைய உழிஞை மாலை சூடிக் கொள்ளை அதிகப்படமாற்றாத தமிழ்ப்படைகளை யெல்லாம இடை வெளியில்லாமற் கொன்றுபரப்பி, மலையை நிலைகுலைக்கும் இடியேற்றைப்போல் சீறி, ஒரு மித்துவளைத்துச் சோழ பாண்டியரிருவரையு மோட்டிய வாட்போரில்மேம்படுகின்ற தானையை யுடையவெல்லுகின்ற போரையுடையோய்! முன் பிறர்பால் வெற்றி பெற்று நினக்கு அழிந்தமாற்றார் நின்னோடு பகைமாறி, இன்றுமுதல் நின்னாலே படைக்கப்பட்டாற் போல் மென்று தாழ்வுகூற, அதற்கு ஏற்ப நீயும், நின் பெருமையும் கண்ணோட்டமுமாகிய நும் நுகங்கொண்டு இன்னும் வெற்றி மிகுநதனை. (நின்குணங்கள் இவ்வாறு கிய அதனனே) செல்வக்கோவே! சேரர் மருக! வாழ்வா

யாக! காற்றினால் எழும் திரைகள் முழங்கும் ஓசையுடைய (கடலை) எல்லையாக வுடைய பெரிய இடத்தையுடைய உலகம் செய்த நன்மை உண்டெனில், பல கேடில்லாத அடை அடுத்தல் அறியாத பல ஆம்பலாகிய (எண்ணுள்ள) ஆயிர வெள்ள ஊழி வாழ்க.

# 64

வெற்றி முரசுடையோரும் (கூரிய) வாயுடைய வாட்போரில் வெற்றியுடையோரும் பொன்னாபரணங்களை அணிந்தோருமாகிய வேந்தர் உலகிற் பலராவர். அவராற்பெறும் பயன் என்? அறம் கூறிப்பிரகாசமடைந்தநாவும், உயர்த்திச் சொல்லப்படும் வேள்வியை முடித்த கல்வியுமுடைய அந்தணர் அரிய ஆபரணங்களைப் பெற்றனர். நீர் படுகையினால் மிகச் சேறுடியதால் களிறு நிற்றற்கு வெறுக்கும் முற்ற முடையதும் ஆண்டு வாழ்வார்க்கல்லது பிறர்க்குப் புகுதற்கரிய ஒழுங்குடையதுமாகிய மாளிகையின் புறத்துக் கூத்தரை (நீங்கள் காணினும்) விரைவில், கூரியகத்தரிக் கோலால் மட்டஞ் செய்யப்பட்ட பிடரிமயிருடைய குதிரைகளை, அவை இழுக்கும் வண்டிகளுடன் ஆபரணங்களால் அலங்கரித்து ஈமினென்று (அங்குள்ளார்க்கு)க் கட்டளை செய்து நின் ஊரிடத்து நீங்காத ஈயும்கோட்பாடுடையனாயிருப்பை. ஆதலால், கரியபரந்தகழியிடத்து மலர்ந்த நெய்தலின் இதழ்போன்ற அழகிய தோற்றத்தைப்போல் உயர்ந்த முகிலினும் பெரிய பயன் பொழிவாயாக. அண்ணல்! தோன்றல்! பசியுடைய சுற்றத்தின் வருத்தங்களைந்த புகழமைந்த பாசறையிடத்தே, ஆகாயத்தில் பல மீன்களின் ஒளிகெட ஞாயிறு தோன்றியாங்கு பகைவரின் மாறுபாட்டை அழித்த நின் வலியதாள்களை வாழ்த்தும் பொருட்டு நின்னைக் காணவந்தேன்.

## 65

வீழ்ந்துகிடக்கும் பிணங்களை இடறுதலால் இரத்தக் கறை பட்ட குளம்பும் வேகமுமுடைய நல்ல குதிரைகளுக்கு விரிந்த தலையாட்டமணிந்து, எதிர்த்து மலைந்தபகைவர் வீரம் கெடும்படி பொருதவரும், எப்பொழுதும் நிலையாமையை உள்ளத்திற் கொண்டிருக்கும் (அதாவது எப்பொழுதும் போரில் உயிர் விட ஆயத்தமாயிருக்கும்) பெரும! வில் வீரர்களது கவசமே! சேர்ந்தோர்க்குச் செல்வ! ஆபரணங் கள் அணிந்த பெருத்த அலங்கரிக்கப்பட்ட இள முலையும், மலர்ந்த நோக்கும், மூங்கில்போன்று பணைத்து விளங்குகின்ற இறையுடைய பெருத்த தோளும், அழகிய கடவுளரும் ஆள் கின்ற கற்பும், தூரத்தே நறுமணம் வீசும் நல்ல நெற்றியும் இளமையுமுடைய ஆபரணங்களணிந்தவளது கணவ! பாணர் புரவல! பரிசிலர் செல்வம்! மார்பிடத்து புண்கள் விளங்குதலால் புகழ்சான்ற மார்ப; நின் ஓலக்க இருப்பின் சிறப்பையெல்லாம், இனியநரம் புடைய பாலையாழை மீட் டலில் வல்லோன், பாலைப்பண்களை எல்லாம் ஓரோவொன்ரு கப் பெயர்த்து வாசிக்குமாறுபோல ஒன்றோடு ஒன்று ஒவ் வாத இன்பத்தை உண்டவர்க்குக் கொடுக்கும், (நிலத்தைச்) சேறு செய்கின்ற மாரிபோலளிக்கும் விழாவின் தன்மை பொருந்திய கள்ளுவர்க்கங்களின் மகிழ்ச்சியால் இனிது கண்டேம்.

## 66

வளைந்த கரிய கோடுடைய இனிய ஓசைபழுத்த பெரு மையுடைய பெரிய யாழிடத்தில் பாலைப்பண்ணை வாசித்துப் (பரிசில் பெறும்) நினைவுடன் செல்லும் பாடிப்படிந்த வாயு டைய இரவல! பகைவரது வலியைத் தாங்கிய அவராற் குலைத்தற்கரிய ஒழுங்குடைய படைவகுப்பினையும், பருவ

மழைக்காலத்து மலையின் கொடுமுடிகளைப் போன்ற பரிசை களோடு மேலே உயர்ந்து விரிந்திலங்குகின்ற வேல்களையும் உடைய மன்னர், பூமாலைகள் அசைந்தாற் போன்று அசை கின்ற வாட்போரிடத்துப் படுவர். அம்மறவர் அணியும் பனந்தோடுடன் வெற்றிமாதுறையும் வாகையின் பஞ்சு போன்ற மலரையும் விரவித்தொடுத்த மாலையைப் போன்று பூத்த முல்லையைச் சூழ்ந்துதிரியும் வண்டு காட்டிடத்தி லுள்ள பிடவின் மாலை போன்ற பூங்கொத்தில் தங்கும். (இவ்வகையான காட்டில்) அழகிய பளிங்கைப் பரப்பினது போன்ற சிவந்த பருக்கைக் கற்களுடைய உயர்ந்த நிலத்தே கதிர்விட்டிலங்குகின்ற திருமணி கிடைக்கும் அகன்ற இடத்தையுடைய நாட்டுக்குரியோன், இடியின் ஓசை யுடைய முரசத்தோடு வஞ்சினங்கூறி வேலை உடைய (பகைவர்) கூட்டத்தினர் போர் சிதையும்படி வெட்டிக் கொன்று புறங்கொடுத்தோடச் செய்த பிணம் குவிந்த களத்துப், பகைவர், திறையாகத் தந்தயானைகளோடு மரக் காலால் அளக்கப்படும் நெல்லாகிய உணவையும் பைக ளிற் போடமுடியாத அளவு (இரவலருக்கு நல்குவான்) என எல்லாரும் சொல்லுவரர்கள். ஆதலால் (இரவல) நீ அவன் பால் ஏகு.

## 67

பந்தர் என்னும் பெயருடைய பெரிய புகழமைந்த மூதூர்க்கு (ஆற்றும்) கடனறிந்த மரபிலுள்ள (யாழ்மீட் டல் மத்தளங் கொட்டல்) முதலிய வற்றில் வல்ல கையை யுடைய பாண! (பரிசில் வழங்குவார்மீது) புகழ்ச்சி உரை களைக்கூறும் சுற்றத்தோடு நீ, கொல்லுகின்ற படைக்கலங் கள் தோன்றவும் வெற்றிக்கொடி அசையவும், பிரகாசிக் கின்ற கொம்புகளோடு வலம்புரிச்சங்கு ஆர்ப்பவும், பல

யானைக் கூட்டங்கள் இடம் பெயர்ந்து திரியவும், போர் செய்யுமிடத்திற்கு இடம்போதாத பிரகாசிக்கின்ற நிணம் நிறைந்த பரப்பில் கூட்டமாகிய சிறகுடைய எருவைப் பறவைகள் இரத்தங்குடிக்கவும், தலை அறுப்புண்டு எஞ்சிய ஆண்மை நிறைந்த உடற் குறைகளோடு உருவில்லாத பேய்மகள் கண்டார்க்கு வருத்தஞ் செய்யவும், நாடு உடன் நடுங்கும்படி பலபோர்வென்று, கொன்றையின் நாறுகின்ற பூங்கொத்துகளுடன் வெள்ளிய (பனந்தோடை விரவித் தொடுத்த) வரியுடைய மாலையணிந்தவரும், வாள்முகத்தில் வெட்டிய மாட்சிமைப்பட்ட உடம்பை உடையவரும், வளைந்த பெரிய தலையும் நேரிய கொம்பும் பெரிய உடலுமுடைய எருதுபோன்ற தாழ்ந்த வலிய மடையர் இரும்புக் கம்பியிற் கோத்துப் பொரிக்கும் இறைச்சியைப்போல உடம்பு சிதைந்து வடுக்களாலே பூசின சாந்தின் அழகு மறையும் வீரர்களுமாகிய அவர்களது பெருமகனும், தெய்வத்தின் விருப்பத்துக்குரியதென அறிந்தும் மலர்ந்த காந்தளை தவறாது ஊதிய வேகமாகப் பறக்கும் வண்டு, பறைகள் (போரின்மையால் முழக்காது) பண்ணழிந்து கிடக்கும் பெருமைசான்ற உயர்ந்த பாறைகளுடைய நேரிமலைப் பொருநனுமாகிய செல்வக்கோமானைப் பாடிச் செல்வாயாக. செல்லின் தெள்ளிய கடல் முத்தோடு கோடு மணம் என்னும் ஊரை வென்றுபெற்ற நல்ல ஆபரணங்களையும், பெறுகுவை.

## 68

மண்ணினாற்கட்டிய உயர்ந்த வளைந்த மதிலுடைய நகரிடத்துச் சித்திரத்தை ஒத்த (தமது இல்லின்) நெடிய சுவரில், (தலைவன் வினை வழிப்பிரிந்துவராமற்) கழிந்த நாட்கள் பல வற்றையும் நித்திரையின்மையின் பசிய ஆபரணங்கள் நெகிழும்படிகீறிக் குறித்தலால் சிவந்தவிரல்கள் சிவப்பே

றிய, உள்ளிடுமணிகளையுடைய சிலம்பணிந்த தெய்வமாதர் போன்று அழகிய பெண்களைப்பிணிக்கும் மணம்கமழ்கின்ற மார்ப! (நின்தாள் நிழலோர்) காற்று அடித்தலின் கடல் ஒலித்தல் போல மாற்றார் நிலத்திற் கொண்ட பாசறையின் நடுவே, கடிய ஒலியை எழுப்பும் தழங்கும் குரலுடைய முரசம் அகன்ற பெரியவானில் அதிர, அச்சந்தரும் வரிகள் இடப்பட்ட (பகைவர்) மதிலை எறிந்தல்லது உண்ணேம் என்று கூறி ஒன்றின் பின் ஒன்றாகப் பல நாட்கள் கழியா நிற்க உற்சாகம் உடையராய், உடம்பை வாட்டும் வருத்த முடைய பகைவர்தங்கும் அரணைத்தாம்கைப் பற்றினன்றி, இனிய கள் விற்றற்கு அடையாளமாகக் கொடிகட்டப்பட்ட வீதியிற்புகுந்து அரிய கள்ளின் விலைக்குப் பகை வேந்தன் ஊருகின்ற யானையின் வெண்கோட்டைக் கொடுத்தபின் (உண்டு) மகிழ்ந்து துன்பம் இடைவிரவாது இன்பமாகவே செல்கின்ற வாழ்க்கையையும் எப்பொழுதுமுடைய, வட பூமியாகிய உத்தர குருவிற் பலநாள் தங்கப் பெறுவரோ? (பெறார்). (அவர் அவ்வாறு உத்தரகுருவிற் பெறும் இன் பத்தைப்பெறினன்றி, நின் மார்பாற் பிணிக்கப்பட்ட அரிவையரும் இனியநகை தினமும் பொருந்திய பல நாட்களைப் பெறுவதேது).

## 69

மலை ஒத்தயானையும் வானை முட்டும் வெற்றிக் கொடியும், மலை மீதுள்ள அருவி போல் முறை முறையே அசையவும், கடல் போன்றதானையும், கொடியகுரலுடைய முரசமும், காற்றடிக்கும் கடல் போல்முழங்கவும், (பகைவரது) ஆராய்ந்து எடுத்த வெற்றி வீரரோடு, வெட்டிக் கூர் மழுங்கிய வாயுடைய வாளையுடைய வீரரையும், இலை போன்ற வேலையுடைய வீரரையும், தெரிந்தெடுத்த பாய்கின்ற குதிரைப் படையையும், பிணங்கள் வீழ்ந்து குவியும்படி,

கொன்று (கெட்டுப் போன அப்பகைவரது) குடிகளை அந் நாட்டில் வாழும்படி அருள் செய்த வெற்றி வேந்தே! இலங்குகின்ற சுடர் விடும் சக்கரத்தையுடைய நின் முன்னோர், (நிச்சயமாக) நின்னைப் போல் அசைவில்லாத கொள்கையுடையர் ஆதலின், (பொன்னுலகமன்றி) மன்றங்களுடைய இம்மண்ணுலகம் முழுவதும் பயனைப் பொழிந்தாற் போன்றும் சூரியன் சினந்தணிந்தாற் போன்றும் தோன்ற (மாதம் மும்மாரி பெய்யவும்), வெள்ளி மழைக்கு உடலான மற்றை நாள் கோள்களுக்குச் செல்கின்ற நல்ல நாட்களிலே நிற்கவும் விசும் பிடத்தே உள்ளமழை, இவ்வுலகினையானே புரப் பேனென்று ஏற விட்டுக் கொண்டு நின்றாற்போல நிற்பவும், நாலுவேறுதிசைகளும் பகையின்றி விளங்கவும் (நின்புகழெல்லாம் உளவாக) அசைவின்றி ஆண்டோராவர்.

## 70

களிற்றைச் செலுத்தியதாளும், குதிரையை வருத்திய பாதமும், (மாற்றார்)போரைத் தொலைத்த வேலும், மலையை அலைத்த (வலிய) தோளும், வில்லை அலைத்தவலியும் உடையவரும், வண்டு இசைபாடாத குளிர்ந்த இளம்பனையின் குவிந்த கூரிய வெள்ளிய குருத்தோடு இனிய சுனைநீரில் மலர்ந்த மலரைத் தொடுத்த மாலையை அணிந்தவரும், மதத்தினால் செருக்கியஉடைகின்ற நிலைமையினையுமுடைய(பகைவரது) போரைவென்று வீரத்தைக்கெடுத்து கடிய சினமுடைய அரசரின் செருக்கொழித்தவரும், நகைக்காயினும் பொய்கூறாத வாய்மையும் பகைவர் புறஞ் சொற்கேளாத குற்றந்தீர்ந்த புகழுடையருமாகிய, பெரிய வீரக்கழலணிந்த வீரர் பெரும! மென்மைக்குணங்கள் சிறந்து பெரிய மடம் நிலைபெற்ற கற்புப் பொருந்திய நறுமணங்கமழும்

சுடர்விடும் நெற்றியுடைய குற்றந் தீர்ந்தவளது கணவ! பூண்கள் பிரகாசிக்கின்ற மார்ப! நின்னைவிட்டு நீங்காத கொள்கையுடைய சுற்றம் நின்னைச் சுற்றியிருக்க வேள்வியில் கடவுளுக்கு ஆவுதி அளித்தாய். புத்தேளிர் நாட்டுத் தேவர்களை இன்புறுத்தினை. வணங்கிய சாயலும் (பகைவரை) வணங்காத ஆண்மையுமுடைய இளைய வலிய புதல்வ! நின் முதியோரைப்பேணி அவர்களுக்கு இறுக்கும் பிதிர்க்கடன்களைச் செய்த வெல்லும் போருடைய தலைவ! சிகரங்கள் தோறும் நிறைந்து மாண்டோர்களுடைய உலகமுங் கேட்கும்படி இழுமென் ஓசையோடு இழிகின்ற அருவியுடைய நீண்ட அயிரைமலைபோல நின்வாழ்நாள் நீங்காதாகுக.

இப்பாடலின் மூலத்தில் (23வரி) மாடோர் என்றிருப்பதை மாண்டோரென்றும், இளந்துணைப் புதல்வரின் முதியர்ப்பேணி (21வரி) என்றிருப்பதை இளந்துணைப் புதல்வ நின் துணைவர்ப்பேணி என்றும் பொருள் கொண்டேம். 'ரின்' என்பது நின் என்றிருக்க வேண்டும் போல் தெரிகிறது.

## ஏழாம் பதிகம்

வீரத்தோடு பகைவரை அகப்படுத்தியவரும் பெரிய நுண்ணிய கல்வியுடையவருமாகிய அந்துவனாகிய சேரனுக்கு ஒரு தந்தை ஈன்றமகளாகிய பெருந்தேவியிடம் பிறந்தமகன், அரசனைக் கொன்று பகைவரை ஓட்டி, அச்சந் தருந்தானையைக் கொண்டு சென்று பலபோர் வென்று, புகழ்தலைமைந்த பெரிய வேள்வி வேட்டகாலை மற்றுமுள்ள அறத்துறைகளையுஞ் செய்து முடித்து, திருமாலைத் தனது நெஞ்சில் உறைய வைத்து நெல் விளைவு நீங்காத ஒகந்தூரைத்திருமாலுக்கு அளித்து, புரோகிதனிலும் தான் அறநெறியறிந்து செழித்த உள்ளத்தோடு குற்றம் நீங்கிய

செல்வமுடைய கடுங் கோவாழியாதனைக் கபிலர் பத்துப் பாட்டுப் பாடினர்.

பாடிப் பெற்ற பரிசில்; சிறு கொடை என நூறாயிரங் காணங் கொடுத்து நற்றாவெனும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தானக்கோ. இவன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

---

## எட்டாம் பத்து

### 71

இடையருக்குத் தலைவனை கழுவுளுடன் கோபித்து எழுந்து, உரோஞ்சி ஊரை எரிக்கும் நெருப்புப் பரக்கவும், (நெற்) போரை எரித்து மணக்கும் புகை திசைகளை மறைக்கவும், மதிலின் வாயில் தோன்றாது அம் புகளைச் செலுத்தும் வீரர் ஆழ்ந்த அகழுடைய மதிலின் அடியில் குறுகிய தாளுள்ள ஞாயில் கிடக்கும், காவலுடைய மதிலின் கதவைக் கைப்பற்றினை; கைப்பற்றி ஏறுகளோடு கன்றுகளுடைய பசுக் கூட்டத்தைக்கவர்ந்து புலால் நாறும் வில்லுடைய இளைய வீரருக்குப் பங்கிட்டளிக்க, அவ் இளையர் அந்நிரைகளைத் தமது அழுகிபகைகளாற்பிறர்க்களிப்பர். (இவ்வாறு கழுவுளின்) தலைமடங்குதலும் மத்தைக் கயிற்றால் இழுத்துக் கடையும் கழிந்த பொழுதை நினைந்து இரங்கும் இடையர் பெரிய பயத்தினால் (கழுவுளை விட்டு) நினக்குத்திறை கொடாத வேறு குறும்பர் நாட்டிலே அவர் நாடு பாழாகும்படி சென்று தங்குவர். வெல்வதற்கு அரிய போரின் அரிய நிலைமையைத் தாங்கிய புகர் நெற்றியுடைய களிற்றுயானையோடு அரிய ஆபரணங்களை முன்கொடாத அவர் புதிதாகத் தேடிய பொருளோடு முன்னே தேடிய பொருளும் அற்

றது என மெய் நடுங்க மிக்கு நின்னை அணங்கெனக் கரு திப் பலபடப் பரவுவர். பேய் தான்பற்றினுருயிரை வௌவா து தனக்கு அவர் பலியிட்டுழி அப்பலி கொண்டு பெயரு மாறு போல நீயும் அவருயிரை வௌவா து திறைகொண்டு பெயராநின்றாய். (நீ செய்தது இது மாத்திர மல்ல) நீங் காத புது வருவாயுடைய அகன்ற இடமுடைய வயலின் நீரிலே வளரும் ஆம்பலை நெய்தலோடு அரிந்து வயலிடத்திற் பெண்கள் விளையாடும் கடா விடும் பெரியகளத்தில் பெரிய கடாக்கள் உதிர்த்த, மெல்லிய சோற்றைக் கொடுக்கும் செந்நெல்லை மரக்காலால் அளந்து பையிடத்திற் போட்டுக் குவித்தாற் போன்று, கடிதாகக் கொட்டுதலுடைய குளவி யினம் திரண்டு தங்கும் கூடுகளைக் கொண்டிய சிறுவரைப் போலப், பெருமானே! வருந்தினார்கள்; இனிமேல் உள்ளத் தில் அறிவுடையோரையும் மூடரையும் அவரவர் அறிவி னைத் தெரிந்து எண்ணி அவரவரிடத்திற் செய்யும் அருளை நீந்து அருளாயாயின் நெடுந்தகாய்! இவண் வாழ்வார்யார்? நின்வாழ்நாள் வாழ்வதாக.

## 72

நின்னோடு கோபித்து எதிர்த்தோர் தம் அறியாமை யின் மிகுதியால் நின் குடியிலுள்ள முன்னோராகிய அரசர் உலகத்தை ஆளுதற்கு அறிவு வலி யுறுத்தியவரும் காரியங்களை நன்றாயறிந்த உள்ளத்தையுடையருமாகிய சான்றோரை ஒத்த நின்சூழ்ச்சிப் பண்பை அறியார். நீ தான் சூழ்ச்சி உடையை அன்றி, சினம் பொருந்திய குரிசில்! நின்னை எதிர்த் தோர்க்குப் போர் செய்யுமிடத்து, எல்லா உயிரும் இறந்துபடும் ஊழிக்காலமுடிவில் நிலத்தின் பாரம் நீங்கப் பரந்து, நீர் மண்டி வருகின்றவலிய திரைகள் உடைய தும், பல்லுயிரையும் ஒருங்கு தான் கொல்லுங் கருத்து

டையதுமாக கோபித்தெழுகின்றதுமாகிய வெள்ளம் எல்லேயில்லாத திசைகளில் இருள்சேரப் பரக்கையாலே, அதனைமாய்க்க வேண்டி ஆதித்தர் பன்னிருவருந் தோற்றிய வடவைத்தீ அனையை; அதனை அறிகின்றனராதலால் தம் பகைமிகுதியால் அஞ்சாராய் அவர் படைஎடுக்கத் துணிதல் அல்லது பலரும் தம்முடன் ஒருங்கு கூடிக்காக்கினும் தம் நாட்டைக் காக்க மாட்டார்.

## 73

அறிவுடையோர் எண்ணினும் மூடர் எண்ணினும் பிறர்க்கு நீ உவமையாவதல்லது நினக்குப் பிறர் உவமையாகாது ஒப்பற்ற பெரிய வேந்தே! சிறந்த விரிந்த இடத்தையுடைய விளைந்த வயல்களிலுள்ள நாரையை ஒப்பும் மகளிர் பசிய ஆபரணங்களைக் களையாது ஒன்றுக்குப் பக்கத்தே ஒன்றாய் பல கூட்டங்களாக நின்று குரவை ஆடுவர். (இவ்வகைச் சிறப்பமைந்த) காவிரி நீரால் நிறைந்த வயல்கள் பரந்த வனப்புடைய புகார் நகரையுடைய செல்வ! பாண்டி நாட்டவர் மெய்ம்மறை! மூங்கில் பரந்து வளரும் மழை தவழ்கின்ற நெடிய சிகரமுடைய கொல்லி மலைப் பொருந! கொடியசையும் தேருடையசேர! நின் செல்வமும் ஆண்மையும் கொடையும் உலகத்து மக்களின் அளவைக் கடந்தன. நின்னோடு மாறுபடுவது நமக்கு உறுதியன்றென யான் பன்னாட் சொல்லியும் (நின் பகைவர்) தேறிற்றிலர்; தேறாராயினும் உலகத்து மதிப்புடைய சான்றோர் சொல்லத் தாம் தேறுவாரோ வெனக் கருதின், அவர் சொன்னவிடத்தும் அவர்கள் மதி மருண்டது காணா நின்றேன். ஆதலால் நின்பெருமையை அவர்கட்கு எப்படி உரைப்பேனெனயான் வருந்தா நின்றேன். இது என்னிடத்துள்ள குறை. இதனை அறிந்து நீ அவர்பால் அருள வேண்டுகின்றேன்.

## 74

இவ்வுலகத்தவர்களுக்குச் செய்யவேண்டிய அரிய கடமைகளைச் செய்துமுடித்த போரில் வெற்றியுடைய முதல்வ! யாகஞ் செய்தற்குரிய விதிகளைக் கேட்டு அதற்குரிய விரதங்களை விடாது தேவர்கள் உவக்கும்படி வேள்வி வேட்டனை *என்றும், சாய்ந்து கருமணல் ஒத்துத் தாழ்ந்த கரிய கூந்தல் முதலியவற்றால் வேறுபட்ட நின் தேவி (மனைவியர் பலருள் பட்டத்துத் தேவி) நல்ல அழகிய மணிகள் அணிந்த வடிவமைந்த தோளும், கரிய சுருண்ட மயிரும் பிரகாசிக்கின்ற நெற்றியுமுடையவள். (மானின் இலக்கணங்களை) அறிந்தோர் மலை அடைந்தும் சிறு குன்றுகளை நாடியும் சென்று கொணர்ந்த சிறிய பசிய புள்ளிகளும் மரக்கிளைகளை ஒத்த கவர்பட்ட மருப்புமுடைய புள்ளிமானின் இறைச்சியை நீக்கிக் குற்றங்களைப் போக்கி வட்டமாய் வெட்டிய பிரகாசிக்கின்ற எஞ்சிய தோலின் விளிம்பிலே, கோடுமணம் என்னும் ஊரிற் கிடைத்த தொழில் மாட்சிமைப்பட்ட நல்ல ஆபரணங்களையும், பத்தர் என்னும் ஊரார் (திறையாக அளந்த) பலராலும் புகழப்படும் முத்தையும் விளிம்பிலே வைத்துக் கட்டிக் கூரிய இரும்பூசியினால் (தொழில் வல்லோன்) தோலுட்செய்யும் தொழிலெல்லாம் செய்து (தைத்த) தோலினை விசும்பிற் பறக்கும் பருந்து கவருதற்குப் பார்க்கச் சூடினமையால், கருவில் மாசம் நிரம்பிப் பெரிய அறிவைப் பெற்று, அமைதியும் தலைமையும் உட்பட்ட பிறவுமாகிய ஆளுகைக் கமைந்த வீரம் பொருந்திய புதல்வனைப் பெற்றனை என்றும், யான் மருண்டேனல்லேன்.

---

* வேட்டனை என்றும் பிரகாசிக்கின்ற நெற்றியுடையவள் சூடினமையால் புதல்வனைப்பெற்றனை என்றும் எனச் சேர்க்குக.

நின்னை நல்வழியில் ஒழுகுவித்து நின்ற நரைமூதாளனை (புரோகிதனை) நின்தவ ஒழுக்கத்தானே, கொடையும் பெருமையும் செல்வமும் சந்ததியும் தெய்வமும் ஆகிய பலவும் தவமுடையோர்க் கெனக் கூறி இல்லற ஒழுக்கினை ஒழித்துத் துறவொழுக்கத்திலே செல்ல ஒழுகுவித்தனை; அவ்வாறு செய்வித்த நின் பேரொழுக்கத்தினையும்பேரறிவினையும் தெரிந்து நான் மருண்டேன்.

## 75

பொறைய! (=சேர) நீ பெரிய புலியைக் கொன்று களிற்றை அடும் (எதிர்த்தற்) கரிய கோபமுடைய சிங்கம் அனையை! அதனால், பல வேற்படையையும் பொன்மாலையாலலங்கரித்தயானையையும் அழகிய தேரையுமுடைய வேந்தரும் வேளிரும் பிறரும் நின் அடிக்கீழ்ப்பணிவர்; பணிந்து, நெல்லின்கண்ணே நெருங்கி வளர்ந்தமையால் அறுக்கப்பட்ட கரும்பு இடையறாது பாகு அளிப்பதும், வருவாரைக் கணக்கிட முடியாததுமாகிய வளம் பொருந்திய தமது மருத நிலங்களுடைய நாட்டை (ஆளாநிற்பர்). (முன் பணிந்ததற்கேற்ப)பின் நின்வழி ஒழுகாராயின் அரிய பறையைக்கொட்டும் தொழிலாளர் புல்லியபோர் செய்து கள்ளு விற்கும் வீதியில் அக்கள்ளுக்கு விலையாகக் கொடுக்கும் வெள்வரகு வித்துதற்கு உழுத கொள்ளுடைய காம்பையாகிய வலியபார் நிலத்திலே கெட்டுப்போயிருந்து (ஆண்டு விளைந்த) வெள்வரகு, உண்பதன்றித்தாம் பண்டுண்ணும் செந்நெல் உணவு உண்ணக் கிடையாதபடி வறுமைப்படுவர்! அவர் தந்நாட்டை ஆள எப்படி முடியும்.

## 76

முகில் படிந்து கருமைகொண்டு குளிர்ந்த துளிகளைச் சொரிதலால் பல விதைகளை உழுது வித்தும் (தொழிலாற்

பெரியராயினும் குலத்தாலும் ஒழுக்கத்தாலும்) சிறிய ஏராளர், உழுது விளைவித்துக்கொள்ளலன்றி, குளிர்ந்த துறையிடத்துள்ள பகன்றைப் பூவாற்றொடுத்த மாலையை வெளுத்த ஆடைபோற் சூடிக்கொண்டுநின்று உழுத இடங்கள்தோறும் ஒளியுடைய திருமணிகளை எடுக்கும் நாட்டுக்குரியோனவன் (நம்வேந்தன்). அவன், மன்னரது களிறுடைய போர் சிதையும்படி உயர்த்திய, பிரகாசிக்கின்ற வாளும், முரசுமுழங்கும் படையுமுடைய மன்னர் கூடிச் செறிந்த நிலைமையை அழித்து, துறையிடத்திற் போய்ப் பெரிய கடலைநீந்திய மரக்கலத்தை அழிவுறாது பாதுகாக்கும் பண்டவாணிகரைப்போலப் பெரிய படைவகுப்பிலுள்ளவர்களின் புண்ணை நீக்கி, அவரது வலிய துயரைக்களைந்து போரிடத்து வினையிலிருத்தலே விநோதமாகக்கொண்டு, இரந்தவர்க்கீந்து, பின்னுமிரப்பவர்களுக்கு மாக்களை வரையாது கொடுக்கும் மாசிதறிருக்கை (=மா + சிதறு + இருக்கை) யைக்கண்டுபோக வந்தேன்.

## 77

வழியிடத்தே செல்லும் புதிய மக்காள்! சினந்த போரையுடைய பொறையன், என்ன? பெரும்படையனோ என்றனிராயின், அவன், தானையிடத்துள்ள பகைகெட்டோட அரசரைக் களத்திலே உடல் ஒழிந்துகிடக்கக் கொன்று வென்று தோளோச்சித் துணங்கையாடிய வீரர் இப்பொழுது இவன் களத்திற் பட்டுக்கிடக்க அப்பிணங்கள் மேல்உருண்ட சில்லுடைய பண் அமைந்த தேரும், மாவும், மாக்களும் எண்ணற்கு அருமையின் எண்ணிற்றிலன்; கட்டுத்தறியில் நில்லாது குத்துக்கோல் பலவற்றை முறித்து, உயரப்பறக்கும் பருந்தின் நிலத்தேதிரியும் நிழலைச்சாடித், தூரத்தே பால்நிறைந்த மேட்டில் நேரிய படையுடைய

கொங்காது ஆ பரந்தாற் போற்செலவுடைய யானைகளை அவன்றானையிற் காண்பாய்.

## 78

சில வளைகளையுடைய விறலி! நீ செல்குவையாயின், கிளி கடிகின்ற மகளிர் (சமீபத்திலுள்ள மருத நிலத்தே சென்று) நெய்தலோடு விரிந்த இதழுடைய தாமரையை அரிந்து, பின் கிளி கடிகின்றவர்களாய் பல வளமுடைய முல்லை நிலப் புனங்கடோறும் (கிளி கடி பாடலை) நுவல்வதும், பல பயன்களுடைய காடுடைய ஊரில் வெல்கின்ற போரையுடைய வீரர் வீரம் புரிந்து காக்கும் விற்படை தங்கும் காடுடைய தகடூரை அழித்து, (சினமிகுதியால் மாற்றார் படையினை நேரே பாராது) எடுத்தும் படுத்தும் வளைத்தும்) பேய்போலப் பிறழநோக்கிய பல வாத்தியங்களுடைய அவரோடு உற்ற கடியபகை ஒழியச் சென்று கொடிய முனையை அழித்தபோது, குதிரையோடு ஆபரந்தன்ன யானையையுடையோன் குன்று, உவ்வெல்லையில் அருவி, வெற்றிமுரசைப்போல் ஒலித்துப் பிரகாசத்துடன் விழும் அதுவாகும். சில்வளை விறலி!

நீ செல்குவையாயின், யானை உடைபோனது குன்று உவ்வெல்லையில் உள்ள அருவிபாய்கின்ற அதுவாகும் என விறலியை ஆற்றுப் படுத்தியது இச்செய்யுள் என்க.

## 79

மாலை அணிந்த மார்ப! போரிடத்து உயிர்களைக் காத்தலுடையை, இரவலரின் நடுவே கொடையைப் போற்றுவை. பெரியோரைப் போற்றிச் சிறியோரை அளிப்பை; நின் எல்லாக் குணங்களும் அளத்தற்கரிய; நீ அவ்வாறொழுகுதலின்பலதிசைகளிலும்பரந்தநல்லிசையை இனிக்கனவிலும் பிறர் நச்சுதற்கறியார்; அதனை அறியாமையின், பிரகாசிக்

கின்ற சிவந்த நாவால் நின்னை வணங்காதவர்களை அழித்த ஆண்மையையும், வளையணிந்த பெண்களின் தோளிடத்துக் குழைந்த மாலையையு மணிந்தமார்ப! நின்னை வழிபட்டிருத்தலன்றித் தம் நிலத்திலிருந்து நின்னோடு பகைத்து, (பின்பு போர்க்களத்து நின் வலியைக் கண்டு இனி நின் வழி ஒழுகுவேம் எனச்சொல்லித் தாம்) ஏறியயானையினின்றும் இறங்கி வில் நாண் அறுப்புண்டு நின் செங்கோல் வழி ஒழுகாத வெல்கின்ற போரையுடைய வேந்தர் முரசினை உடைத்து, அவர் அரசயானை கதறும்படி கொம்மை யறுத்து நீ இணக்கிய அழகிய கட்டில்மேல் இருந்து, தும்பை சூடிய வீரரின் உடம்பு அசைந்து வருகின்ற நிறமுடைய இரத்தத்தை அன்றிப் பலி கொள்ளாத அஞ்சுந் தன்மை யுடைய கொற்றவை உறைகின்ற அயிரைமலைப் பெரும! நின்புகழ்கேடிலவாக.

## 80

உலகமுழுமையும் நிலைபெற்ற நல்லபுகழுடைய தொலையாத கல்வி யுடையோய், அம்புடைய வலிய வீராகிய உயர்ந்தோர், நின்பகைவருடைய பெரிய மருப்புடையகளிற்றியானை மலைபோற் கூட்டமாய் நிற்கவும், எடுத்துமுழக்கிய வெற்றி முரசம் கார்கால மழையினும் கடிதுமுழங்கவும், அவற்றை ஒன்றும் மதியாது நின்னோடு, சாந்து புலர்ந்த பெரிய மார்பும் (வீர) வளை சுடர் விடுகின்ற வலியமுன் கையும், எப்பொழுதும் பொருது புண்ணுறாத தோளில் மாலையும், காலில் வீரக்கழலும், பிறங்கிடாத வலிய அடியும், பிரகாசிக்கின்ற வாளுமுடைய, கேடில்லாத பகைவரின் எதிர் நின்று உலாவி, 'இவ்எதிர்த்த வேந்தனுக்குத் திறையிடுக' எனச்சொல்லி நின்னை (அவ்உயர்ந்தோராகிய வீரர்) வாழ்த்தும்படி நீ அதற்கேற்ற தன்

மையை உடையை ஆதலால், நின்பகைப்புலத் தெல்லையில் நின்பகைவரைக் கடிய குதிரைபூட்டிய தேர்மிசைக் கொடி, சினந்தபோரைக் குறித்து எழுவதெப்படி.

நின் வீரர் நின்னோடு வலிய பகைவரின் முன்னின்று வெருவி வேந்தர்க்குத் திறைஇடுக எனக்கூறித்திறை இறுப்பித்துத் துதிக்கும் இயல்பினையாதலின் போரைக் குறித்து நின்தேர்மிசைகொடி எழுவதெப்படி என்றவாறு.

## ஏழாம் பதிகம்

பொய்யில்லாத செல்வக்கடுங் கோவுக்கு வேளாவிக் கோமான் மகள் மதுமன்தேவி யீன்ற மகன் கொல்லிமலைக் கூற்றத்திலுள்ள நீர் மிக்க மலையினுச்சியில் பல வேற்படையுடைய அதிகமானோடு இரண்டு பெரிய வேந்தரையும் ஒருமித்து வென்று, அவரது முரசும் கொடியும் கலனும் கொண்டு புகழமைந்த போர்க்களத்தே களவேள்வி செய்து குற்றந்தீர்ந்த மகளிர் இரங்கும்படி மயிரை அறுத்துத் தகடூரைவென்று அதன் மதிலைக் கைக்கொண்டு பெற்ற அரிய வலியையும் பிரகாசிக்கின்ற புகழையுமுடைய பெருஞ் சேரலிரும் பொறையை குற்றந்தீர்ந்த வார்த்தையுடைய அரிசில் கிழார் பத்துப்பாட்டுப் பாடினார்.

பாடிப்பெற்ற பரிசில்: தானும் தேவியும் புறம்போந்து நின்று கோயிலிலுள்ள வெல்லாம் கொண்மினென்று ஒன்பது நூறாயிரம் காணத்தோடு அரசுகட்டிலுங்கொடுப்ப, அவர், யான் இரப்ப இதனை ஆள்க வென்று அமைச்சுப் பூண்டார். தகடூரெறிந்த பெருஞ் சேரலிரும் பொறை பதினேழியாண்டு வீற்றிருந்தான்.

---

# ஒன்பதாம் பத்து

## 81

உலகைக்காக்கும் அழகிய சிறப்புடையதும் (கரிய) கொழுமையுடையதுமாகிய (மலையிற் படிந்த) மேகங்கள், அகன்ற பெரியவானிடத்து அதிர் கின்ற கோபத்தோடு அச்சந்தரும் இடி இடித்து, எழுந்து, விசும்பை அடைந்து கார் காலத்தை அறிவிக்கும். அப்பருவத்தால் (கார்காலம் பிரிந்த தலைவர் சேர்ந்துறையும் முல்லைக்குரிய பெரும்பொழுதாக லின்) வருத்தங் கொள்ளா நிற்கக், களிறுபாய்ந்து செல்லவும்,கதியுடைய குதிரைவீரரைத் தாங்கிச்செல்லவும், பிரகாசிக்கின்ற கொடி அசையத்தேர் சுழன்று திரியவும் அரசர் புறத்தே சூழ்ந்து தங்கினும் அஞ்சாதோரும், தமதுகாவலிடங்களைப் (பகைவர்) கைப்பற்றமுடியாதவலியுடையோருமாகிய வலிய வீரர், பெரிய இருண்ட இராக்காலத்தும் சிறந்த வீரவளை பிரகாசிக்க (குளிர்மிகுதியால்) தோளைப் பிணித்த கைகளை மேலே உடையராய், நாளும் (தாம் மேற்கொண்ட போரை) வெற்றிச் சிறப்புடன் முடித்துக்கொள்ளும்வேட்கையராயும், உயர்த்துக் கூறப் படும் கெடாத நல்ல புகழைத் தங்குடிக்கு நாட்டுவோராயும், முள்வேலியிடாத பாசறையில்உலாவித்திரிவர்.(இவ்வாறுனபாசறையிலிருந்து) நாட்டை அகப்படுத்தினதினுல் அக்காலத்து நேர்ந்த கொள்ளையைமாற்றி அழுன்று செய்யும் போர்த்தொழிலை ஆறும்படிசெய்து, நின்தானைக்குத்தரங்களை (=பதவிகளை) உதவி, வேற்று நாட்டிற்றங்கிய அண்ணல்! மத்தளம் போன்ற பெரிய (பலாப்) பழத்தின் (சாறு) போன்றதும், கரிய அழகிய மூங்கிற்குழாயில் விளைந்ததும், விழாக்கொண்டாடினுலொத்ததுமாகிய இனிய மதுவைப்பருகிக், காந்தள் மாலையணிந்த செழுங்குடியிலுள்ள செல்வர்வினுேதமகிழ்ச்சி

எய்தி இரவலர்க்கு ஈகின்ற வண்டுகள் மூசும் சோலையும், பெரிய மழையுமுடைய கொல்லிமலையிற் பூத்த இருவாட்சி மலரோடு பச்சிலைகளைச்சூடி, மின் உமிழ்ந்தாற்போன்று சுடர்விடும் ஆபரணம் பூண்ட சேடியர்களையுடைய, வண்டு மொய்த்தலின் நிறம் கரந்த சுருண்ட கரிய கூந்தலுடைய வளும், பிரகாசிக்கின்ற நெற்றியுடையவளும், வளைந்த குழைக்கு அழகு பெறப் பொருந்திய நோக்குஉடையவளும், மாட்சிமைப்பட்ட ஆபரணங்களணிந்தவளுமாகிய (நின்) தேவி காணுதற் பொருட்டு நின் தேர் ஒரு நாள் புரவி பூணவேண்டும். அதுதான் அரிவைக்கு ஆகவேண்டு வதல்ல. அதனாலே நின்னோடு போர்செய்கையைக் கைவிட்டு நின் முன்னே வந்து வழிபட்டு நில்லாமையால், முன்பு நின் வலியோடெதிர்த்துப்பின் எதிர்க்கப்பெறாத அரசர்கள் துஞ்சவேண்டும்; நின் தோட்கு விருந்துமாகவேண்டும்; (இவ்வாறு இரண்டொரு காரியமாக இதனைச் செய்க)

## 82

பாடுவோர் கொள்ளக் கொள்ளக் குறையாத செல்வமும், பகைவர் கொல்லக் கொல்லக் குறையாததானையும், (புகழ்காரணமாகிய) கொடையும், பெருமையும், அமைதியும், அறனும் ஆதியவற்றை அறிஞர் சொல்லிப் புகழ்கையால் கெடாத நல்ல புகழுடையவனும், பகைவரதுநிலத்தைக் கவரும் திருவுடையவனுமாகிய நெடியோய்! பெரும! பெரிய பகை ஆதலின் (நின்பகைவர் நின்னை அஞ்சித்தாந்தாம் வழிபடும்) தெய்வத்தைத் தமக்குக் காவலென்று வழுத்தும்படி, வீரர் அஞ்சாது அரிதாகத் தங்கும் (பகைவருக்கு) அச்சந் தரும் பாசறையிடத்து, பலகொடி அசைகின்ற முன்னணியுடைய பகைவரது வலியபோரைத் தொலைத்ததும் முன்னே போர்செய்து பழகியதுமாகிய யானை, மதம் பொழிந்து கடுஞ்

சினம் மூடி வண்டு மொய்க்கும் தலையுடையதாய் (போர் பெருமையால்) திரிய, பாகர் அதன் சினத்தை அளவு படுத்தவேண்டிப் பிடியைப் புணர்க்கப், பிடியைப் புணர்ந்தும் போர்வேட்டுத் திரியவும் வீரர், போருக்கு ஆயத்தமாகவும், (இன்னபொழுது போர் நிகழுமென்று அறியாமையின்) குதிரைப்படை சேணம் இட்டு நிற்கவும், தேர்மீது (போர் குறித்துக் கட்டிய) கொடிகள் அசையவும், பரிசைகள் முன் சொன்ன (காலாள், குதிரை, தேர்) முதலிய வற்றின் பக்கங்களிற் கிடந்து (போர் குறித்தநாளில்) ஆர்ப்பவும், காட்டிலுள்ள விறகை முறித்து தீகாயுந் தன்மையுடைய தாகிய பாசறையில் நீ தங்கி உறையும் நாட்கள் பலவாயின வாதலின், நின்னைப்பாடிக் காணவந்தேன்.

## 83

நின்னைக்காண்பார்க்கு, கரிய முகிற்கூட்டத்தின் முன் (ஒரொருகால்) ஒழுங்குதவறி எழுந்துசெல்லும் வானிற் பறக்கும் கொக்கின் நீண்ட ஒழுங்குபோலக், கொல்லும் யானைகள் நெருங்கிய பலபரிசைக் கூட்டத்தோடு நீண்ட தேர்களில் அசைகின்ற கொடி விளங்காநிற்ப நின்படை செல்லுஞ்செலவு மிக இனிதாகுக. அவ்வாறு அன்புறு வாரை ஒழிய, அதுயார்க்கு இன்பஞ் செய்யாதெனில்: நின் பல குதிரைப்படைகள் நாடுகெடும்படி அழித்து, நல்ல ஆபரணங்களைக் கொள்ளையாகப் பெறும் பொருதற்கரிய கடிய சினத்தை எதிர்த்து மாறுகொள்ளும் பகைவரது பாசறையில் தங்குவோர்க்காகும்.

## 84

ஓசை உயரக் குறுந்தடியாலடிக்க அதிர்கின்ற போர்க் கப்பட்ட முரசு கண் அதிர்ந்தது போன்ற கார்கால

முழக்கிலும், மாற்றாது பாசறையிற் புகுந்து நெற்றிப் பட்ட மணிந்து நிற்கும் போர்க்குரியதென்று எல்லாராலும் சொல்லப்படும் யானையைக் கட்டுத்தூணினின்றும் அவிழ்த் துச் செல்லும் பலவேற்படையுடைய பூழியர் கோவே! பொன்தேருடைய பொறைய! உலகை அழிக்கும் காற்றை ஒத்தமுதல்வ! (பகைப்) புலத்திற் கொடியசையும் காவலு டைய எயில்கள் எண்ணின் எல்லை அறியா; பல குதிரைகள் பரந்தன; (ஆகையால் பகைப்புலம் நமக்கு வெல்லற்கு அரிய தொன்றென்று உணராய்) நீ அவ்வாறு வல்லுனை ஆன படியை முன்பு அறியாது, இன்று போர்செய்து அறிந்தன ராயினும், அவர் நின்னோடு கோபித்து எழுந்து வந்து அதனைப் பின்னுமறிவதல்லது (நின்னை) வணங்கல் அறிகின் றிலர். இனி அவர், முகில்போல் ஆர்த்துமுழங்கும் இளம் யானையின் கீழகப்பட்ட மூங்கில் முளையின் கிளை அழிவது போல அழிவதல்லது உய்யக்கருதுவது யாது?

கோபித்து எழுந்துசென்று போர்க்கபட்ட முரசம், ஆரவாரம் எழுந்து சண்டையை அறிவிக்கப் போர்த் தொழில் பூண்ட மாற்றாது வேற்படை நிறைந்த பரப்பில், காலத்தாற்பெய்யும் மாரிபெய்து தனது தொழிலாற்றி ஆகாயத்திற் சென்றபுயல் நெடுங்காலம் மலையிடத்தே சென்று மழை தோன்றியவிடத்து,பலகுரலுடைய புள்ளின் ஒலி எழுந்தாற்போலப்போரறை கூவும்செருக்குடைய வில் நீங்காத வீரரோடு இடி இடிக்கும் மலைபோற் களிறு நிலத்தே உருள நிலையாமை அமைந்த பல போரைச் செய்து நின் படைக்கூட்டம் ஆரவாரித்திருக்கின்ற இருப்பினையாம் இனிது கண்டேம்.

## 85

(இளஞ்சேரலிரும்பொறை) பொன்னினால் ஒளிவிடும் படி வேலைப்பாடுகளமைத்துச் செய்ததும் பிறர் பூணு தற்கரியதுமாகிய விளங்கும் பெரிய ஆபரணங்களை அணிந்த சென்னியர் பெருமானுடைய (=சோழனது) (பயன்தரும்) நல்ல மரங்கள் செறிந்த பல நாடுகளைக் கவர்ந்து எமக்குத் தந்தான்; அச்சென்னியர் பெருமானை எம் முன்னே பிடித்துக் கொண்டுவந்து தம்பினெனத் தம் படைத்தலைவரை ஏவச், சென்னியர் பெருமானின் படை யாளர் பொருது தோற்றுப் போட்டு ஓடிய வெள்ளிய வேலு டைய செல்வக் கடுங் கோவாழியாதனென்பவன், தீஞ்சுனை களுடைய அழகிய பக்கங்களில் பல கோடுகள் பாந்ததும் (தன் மேல்) ஏறி நாடு முழுவதையும் பார்த்தற்கு ஏதுவாகி யதுமாகிய மலையிடத்து கள்ளுவார்க்கப்படும்மகிழ்ச்சிக்குரிய காலை ஓலக்க இருக்கையின்கண் தன் முன்னோர்களாகிய அரசர்களைப் போல் அரசவை பணியும்படி அறத்தை நாட் டுவதற்கு மறம்புரியும் தன்மையை ஒத்த கொள்கை யுடையை! அவன் தந்தநாடுகள், பிரகாசிக்கின்ற சிவந்த நாவினால் மெய்மையாகப் பாடிய புகழுடைய கபிலன் பெற்ற நாடுகளினும் பலவாகும்.

## 86

நிலத்திலே இரத்தம் பெருகிப், போர்க்களம் புலால் நாற்றம் வீசும்படி கொன்று போரைவென்ற பெரிய வலிய விசாலித்த கையில் வெல்லும் வேலுடைய பொறையன் என்று (எல்லோரும்) கூறுகையால் யான் அவனை அச்சந் தரும் கோபமுடையான் ஒரு மகனென்று (முன்பு கருதி னேன்); அவ்வெண்ணம் இப்பொழுது கழிந்தது. அப் பொறையனாகிய, நல்ல புகழ்நிலை பெற்ற பெரிய உலகில்

இல்லாதவர்களின் வருத்தம் தீர நல்கும் ஆராய்ச்சி மிகுந்த அருள் உடைய நெஞ்சினனாகிய பாடுவோர் வேந்தனும், அசைந்து நடக்கின்ற தலைவனும் ஆகிய அவன், புனலிலே மகளிர் பாய்ந்து ஆட மிதந்து பொன்னாற் செய்த அழகிய குழைமீது தோன்றிய சாந்து மிதந்துவரும் வாணி ஆற்று நீரினும் நிச்சயமாக இனிய குளிர்ந்த சாயலுடையன்.

## 87

பல வேற்படையுடைய சேரன், சந்தனமும் அகிலும், பொங்கும் நுரையிடைத்துச் சுமந்து, தெளிந்த கடலிடத்தே செல்லும் வெள்ளிய தலையுடைய சிவந்த நீரையுடைய ஆற்றின் நீர் வழிச் செலுத்தும், கரும்பாற் செய்த தெப்பத்தினும் அருள்செய்ய வல்லன்; (ஆதலால் அவன் பால்) பாடினி! செல்வாயாக; (செல்லின்) நல்ல ஆபரணங்களைப் பெறுகுவை.

## 88

உலகிற் பரந்த அரசாது தொழிலின் முறை தவறாது, கொற்றவையின் பெயருடைய காட்டோடு* (விந்தாடவி) மலைகள் உயர்ந்து கடலாற்சூழப்பட்ட அகன்ற இடத்தையுடைய உலகத்துத் தமது புகழ்பரந்த பகைவர் தேய, அலையுடைய பெரிய கடல் பிறங்கிடும்படி வேல் எறிந்தும், அழகிய கடம்பை வெட்டியும, பொரும்பொருட்டு மாறுபட்ட கழுவுளைப் புறங்கண்டும், புகழ்பெற்ற மன்னரை வெட்டிக்கொன்றும், கதியுடைய குதிரையைப் பகைவரிடம் கவர்ந்தும், சுடர்விடுகின்ற வாகையுடைய நன்னனை அழித்தும், இரத்தம் சிந்திய குவிந்த சோற்றுமலையோடு அழகிய அயிரைமலைத் தெய்வமாகிய கொற்றவையைப் பரவியும், அரசரும் வேளிரும் பின்சென்று பணிய வெற்றி

* விந்தை = துர்க்கை

கொண்டோரது மரபில் வந்தோனே! நீண்ட பிடரிமயிருடைய சிங்கம்போன்று வீரம் பொருந்திய குரிசில்! முரசு பரந்தொலிக்கின்றதும், பரிசைகள் வரிசையாக (நிறுத்தப் பெற்றது) மாகிய இடத்தில் வலிய களிற்றின்மீது வெற்றிக்கொடி அசைகின்ற பாசறையும், காவலுடைய மதிலை அழிக்கும் கற்களை இடைவிடாது எறியும் கவணையும், பன்னுடையால் வடிக்கும் தேனையுமுடைய கொங்கர் தலைவ! கோபித்தோரைக் கொன்ற பொன்தேருடைய குரிசில்! வளைந்த கடலுடைய தொண்டியோர் பொருந! பெரும! சொல்லப்பட்ட மாட்சிமையுடைய உத்தம இலக்கணங்களோடும், பொலிந்த சாந்தோடும் குளிர்ந்த மணம் வீசுகின்ற மாலை சூடிப்பூண்களைச் சுமப்பவளும், கரிய முகிற்கூட்டங்கள் பெரியமழை பெய்து வேங்கை பூத்துள்ள ஆகாயத்தை முட்டும் உயர்ந்த கொடுமுடிகளிலிருந்து அருவிஓடும் மலையை ஒத்தமார்புடையவளும், தூரத்தே நறுமணம் வீசப்பெறுகின்ற, நல்ல புகழமைந்த அழகிய ஆபாணங்களை உடையவளுமாகிய வளது கணவ! காற்றடித்தலால் உயர்ந்து வரும் திரை அடைக்கப்பட்ட கரையை உடைக்கும் தண்ணிய கடற்கரைச் சோலையுடைய நாடுகிழவோய்! யான் ஈண்டு நின்னைக் காணவந்தேன். நீ நீடுவாழ்வாயாக; எல்லாராலும் புகழ்ந்து சொல்லப்பட்ட தும்பைப்போரை நினக்கு வெற்றி தாற்கு மெய்மையாக வினவும் வலியைத்தரும் கொற்றவை கூடி உறைகின்ற (அயிரை) மலையில் ஊற்றெடுத்துப் பாய்கின்ற பேராறுபோல, வரைவில்லாது வருவோர் செழித்த பல அரும்பண்டங்களைக் கொள்ளக் கொள்ளக் குறையாது, மேலும் மேலும் நின்நகர் சிறப்படையும். (இவ்வாறு செல்வமமைந்த) சித்திரம்போன்ற அழகிய நீண்ட நகரில் பாவை ஒத்த மகளிரின் நடுவே தேவருலகம் ஒளிபெற பெரிய விசும்

பின் கண் உயர்ந்து செல்லும் ஞாயிற்றைப்போலப் பன்னாள் விளங்குக.

## 89

பல வேற்படையுடைய பெரும்பொறைய! செம்மையான வானம் பொழுதொடு விளங்க, காட்டிற் கூட்டமாகிய பெண்மான் ஆண் மானோடு சேர்ந்து திரிய, பெரிய மரக்கிளைகளில் பட்சிகளும் வண்டும் இருந்து ஆர்ப்ப பழமுங் கிழங்கும் உண்ணக் குறைவு படாதிருப்ப, பல பசு நிரை புல் அருந்தித்துள்ள, செல்வம் குறை தலறியாத வளம் பொருந்திய சிறப்புடைய பெரிய பல புதுவருவாயாகிய கூலம் நிறைய, நல்ல பல ஊழிகாலம் நடுவு நிலைமை நின்று ஒழுக, தினந்தினம் நாட்டவர் தொழுது ஏத்த, விண் உலகத்துத் தேவர்கள் ஏத்த, அரசியல் பிழைபாதொழியப் போரில் மேம்பட்டுத் தோன்றி நீ, கனவிலும் நீங்காத போர் வையோடு நின்னிடத்து அடங்கிய நெஞ்சு மாசுபடுதல் அறியாது, குளிர்ந்த மயிர்ச் சாந்து பூசிய ஈரம்புலராத கூந்தலுடைய கலியாணமகளிர் சென்று நோக்கி தம் வாழ்நாளை அறியும் பிரகாசிக்கின்ற ஒளியுடைய அருந்ததியோடு ஒத்த கற்புடைய, ஒள்ளிய நெற்றியுடைய நின் அரிவையோடு காணும்படி பொலிந்து நோயில்லையாகுக.

## 90

வெள்ளி நிற்கும் முறைமையில் நிற்க வானம் மழை பெய்தலின், அச்சம் தீர்ந்து பாதுகாப்பாகித், துன்பந் தீர்ந்து, இன்பம் மிகவுந்தோன்றிப் (பெருக), (பார்ப்பார் முதலாயினர் தத்தமக்கு அளவான) துறை நூல்களை அஞ்சாது நிறையக்கற்க, வலியின் மிக்கோர் கோபிக்கும் கடிய வலியினை அஞ்சாத ஒள்ளிய வெற்றிவேந்தர் யானைகளோடு ஆபரணங்களைத் தந்து, நின் பழமையைப் புகழ்ந்து

ஏவியதைச் செய்ய, அகன்ற உலகத்தவர்களுக்கு நடுவு நிலைமையைச் செய்து, மாயாத பலபுகழ் வானில் பரக்க வாள்வலி புரிந்து சிறப்புப் பூண்டு, அறக்கடவுள் வாழ்த்த நன்கு ஆட்சி புரிந்த வெற்றியுடைய மாந்தரனுடைய மரபி லுள்ளோய்! அழகிய முறைமையில் அயிரைமலைத்தெய் வத்தை வழிபட்டு, கடல் அடங்க வேலெறிந்து, மலை இடத்தவும், நிலத்திடத்தவுமாகிய அரணைக் கைப்பற்றிச் சினந்த பகைவரின் வலியைச் சாய்த்துப் பெற்ற பெரும் புகழைப் பலரிடத்தினின்றும் போக்கிய வெற்றித் திறமை யைப் பெற்ற உரவோர் உம்பல்! கட்டியோடுகூடிய அவரைப் பருப்புப் புழுக்கு முதலிய புழுக்கினையுடைய கொங்கர் கோவே! கள்ளுடைய குட்டுவர் ஏறே! போரில் முதுகிட் டார் மேற்செல்லாத வலியதோளுடைய பூழியர் மெய்ம் மறை! இலங்குகின்ற நீர்ப்பரப்புடைய மாந்தையோர் பொருந! வேளையின் வெள்ளிய பூவொடு சுரைப் பூ மாறித் தொடுத்தாற் போலப் பாசறையில், கலந்த (பிறபல) மொழி களைப்பேசும் வீரரின் வேந்தே! பரந்த கடல்போன்ற தாங் குதற்கரிய தானையோடு பெரிய போர் செய்யும் வில்லை மார்பில் முட்டும்படி வளைத்தலின் நாண் உரோஞ்சுதலால் விளங்கிய, வேந்தர் திரண்டாலொத்த வலியுடைய, வார்ந்து அலங்கரிக்கப்பட்டது போன்ற விசாலித்தகையையும், நட்சத்திரங்கள் பூத்தாற்போன்று விளக்குடைய சேண மும் ஆய்ந்தமயிராற் செய்யப்பட்ட கவரியுமுடைய குதிரைமீது ஏறி, பிடியுடைய வேலைப்பிடித்து எறிந்து, பகைவரை இடும்பை செய்தலை விரும்பும் வீரரையுமுடைய பெரும! உயர்ந்த பெருஞ்சிறப்பினால் ஓங்கிய புகழோய்! குளிர்ந்த புனலிடத்து ஆடுவோரின் ஆரவாரத்தில் கலக்க வெவ்விய போர்செய்யும் மள்ளர் தெள்ளிய ஓசையு டைய கிணைப்பறையைக்கொட்ட, கூலங்களுடைய நல்லவீடு

களில் ஏறுகள் ஒன்றுக்கொன்று மாறுக ஆர்ப்ப, செழிய பலாக்கள் உடைய கொழுவிய குளிர்ந்த வயலிலிடத் துள்ள காவிரி சூழ்ந்த சோலையுடைய வயலினுள்ள உழவர், மத்தளங்கொட்ட வயலினுள்ள மயில்கள் மழையைக்கண் டாற்போல் ஆடும் நல்ல நாட்டைப்போல வளம்பொருந் திய, சிலப்பும் அடங்கிய குணமும், ஆறியகற்பும், தேறிய நல்ல குறளும், வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலுமுடைய ஒண் டொடியின் கணவ! இடிபோல் முழங்கும் முரசும் பெரிய நல்ல யானையுமுடைய இறைகிழவோய்! ஈரம் உடைமை யின் நீரில் வாழ்வோரை ஒப்பை; அளத்தற்கருமையின் பெரியவானம் அனையை; கொள்ளக்குறைவு படாமையின் கடல் அனையை; பன்மீன்களின் நடுவே திங்களைப்போல மலர்ந்த சுற்றத்தோடு பொலிந்து தோன்றுதலையுடையை; (ஆதலால்) நினக்கு அடைத்த நாட்கள் உலகத்திற் திங்கள் அனையவாகவென்றும், நின்னுடைய திங்கள் யாண்டனையாக வென்றும், நின்னுடைய ஆண்டு ஊழியனையவாக வென்றும், நின்யாண்டிற்கு ஒப்பாகிய அப்பல்லூழிதம் அளவிற்பட்ட பலவாய் நில்லாது வெள்ளவரம்பினவாகவென்றும் நினைந்து நின்னைக்காண்பேன் வந்தேன்.

## ஒன்பதாம் பதிகம்

குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழான் மகள் வேள்மாள் அத்துவஞ் செள்ளை ஈன்ற மகன், அச்சந்தரும் தானையோடு சினந்து சென்று இருபெருவேந்தரும் விச்சியும் வீழ அரிய காவற்காடுடைய கற்கோட்டையினகத்து ஐந்து மதில்களை அழித்து, போத்தியை ஆண்ட பெரிய சோழனையும் வித்தை ஆண்ட இளம் பழையன் மாறனையும் (தான்) கூறிய வஞ்சினம் பலிக்கும் படி வென்று, வஞ்சி மூதூரிற்கைப்பற்றிய பொருள்களைப் பிறர்க்கு அளித்து,

மந்திர முறைமையில் (அயிரைத்) தெய்வத்தை வழிபட்டு, தன் மந்திரியாகிய மையூர் கிழானைப் புரோகிதனினும் அற நெறி அறிவானாகப் பண்ணி, அரிய வலிய முறைமையில் நாற் சந்தியிலமர்ந்த கொடிய வலியுடைய பூதரைக் கொணர்ந்து இவ்விடத்து நிறுத்தி, தெரிந்த முறைமையிற் பூசைசெய்து, உலகத்து உயிர்களைக் காத்த குற்றந் தீர்ந்த செங்கோலும், இன்னிசை முரசு முடைய இளஞ் சேரலி ரும்பொறையைப் பெருங் குன்றூர் கிழார் பத்துப் பாட்டுப் பாடினார்.

பாடிப் பெற்ற பரிசில் : மயக்கம் இல்லார்க்கு மயங்கக் கொடுக்க வென்று உவகையின் முப்பத்தீராயிரங் காணங் கொடுத்து, அவர் அறியாமை ஊரும் மனையும் வளமிகப் படைத்து, ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி, எண்ணற்கு ஆகா அரிய பண்டங்களாகிய செல்வத்தோடு பன்னூறாயி ரம் பல படக் கொடுத்து அனுப்பினான் அக்கோ. குடக்கோ இளஞ் சேரலிரும் பொறை பதினாறாண்டு வீற்றிருந்தான்.

1. புறத்திரட்டுத் தொல்காப்பிய உரை முதலிய வற்றிற் காணப்பட்ட "இருங்கண்யானை" என்னும் செய்யுள்.

---

இடி இடித்து முழங்கலின் விசும்பு அதிர்வது போல கண் அதிர்ந்து முழங்கும் கடுங் குரலுடைய முரசோடும் காற்றுப்போன்று வேகமாகிய ஊர்தியோடும், காட்டுத்தீ யைப்போன்ற நிறைந்த (தடுத்தற்கரிய) கோபத்தோடு, பெரிய இடமுடைய பெரிய கடலை நாடி ஓடி நிலந்திரைக் கும் ஆற்றைப் போன்ற வேகமாகிய செலவினையுடைய தானையோய்! நினக்கு.

## தொல்காப்பிய உரையிற் காணப் பட்ட "இலங்கு தொடி" என்னும் செய்யுள்

இலங்குகின்ற பூண் இறுக்கிய மருப்புடையமதம் பொழிந்துநிலம் அதிரும் படி திரியும் வெற்றியுடையகளிறும், நெருப்பு மலர்ந்தாற் போன்று விரிந்த தலையாட்டத்தைச் சூட்டியகதியுடைய குதிரையும், போர்க்களத்து கொடிகள் ஒன்றோடு ஒன்று கலக்கச் சூதாடுமிடங்களோடு ஊன்விற்பாரிடங்களையும் ஒத்து (=கொடிகள் கலந்த அசைதலின்) உயர்ந்து அருவியைப் போன்று ஒலிக்கும் வரியுடைய அலங்கரிக்கப்பட்டதேர்களும் வருதலைக்கண்டு, (பகைவர்) முரசங்கொட்டினர்; பெரிய திசைகள் கல்லென்று ஒலிக்கும் படி காற்றுடியைப்போன்ற ஓசையுடைய கொம்போடு வலம்புரிச் சங்கு ஆர்ப்ப நெடிய மதிலும் நிரைத்தஞாயிலும் காவற்காடும் ஆழ்ந்த அகழும் உடைய, மேலே அகன்ற ஆரவாரிக்கும் அரண் காவலையுடையதாயிருந்தது. செஞ்சுவீரம் அழிந்து நிலை தளர்ந்து நீங்கிய பகை அரசர் நடுங்க இவ்விடம் வந்த பெரிய செலவுநன்மையை அளிப்பதாகுக.

## தொல்காப்பிய உரையிற் காணப்பட்ட "வந்தனென்" என்னுஞ் செய்யுள்

மாரியென்று பாராதும், பனி எனச் சோராதும், பகைவெம்மையினால் அசையாத ஊக்கத்தை உடையோய்! பகைப் புலத்துத் தங்கிய வெற்றியுடைய கொடியதானையோடு பகை மாறாத மாற்றார் பகைதேய வலிமை மிகுந்த கட்டுத்தறியைப் பிளந்து கடாயானை முழங்கும் முன்வேலி இடாத பாசறை யிடத்து, யானையையும், கதியுடைய குதிரையையும் தேரோடு இரவலர்க்கு அளித்து இருக்கும் இருக்கையை! பெரும! வந்து கண்டுபோக வந்தேன்.

[ முற்றும் ]

THE ROYAL PRINTING WORKS, MOUNT ROAD, MADRAS.

# விளம்பரம்

## இந்நூலாசிரியர் செய்த பிற நூல்கள்

| | | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|
| 1. | தமிழகம் | 2 | 4 | 0 |
| 2. | பத்துப் பாட்டு வசனம் | 1 | 0 | 0 |
| 3. | புறப் பொருள் விளக்க வசனம் | 1 | 0 | 0 |
| 4. | அக நானூறு வசனம் I (அச்சில்) (களிற்றி யானை நிரை) | 1 | 0 | 0 |
| | ,, II ,, | 1 | 4 | 0 |
| 5. | (மணி மிடை பவளம்) | 1 | 0 | 0 |
| | ,, III ,, | | | |
| 6. | (நித்திலக் கோவை) | 0 | 12 | 0 |

## தயாராயுள்ள நூல்கள்

கலிங்கத்துப் பரணி வசனம்

தமிழர் சரித்திரம் (ஆதிகாலம் முதல் கி. பி. 300. வரையும்)

## ஆயத்தமாகும் நூல்கள்

சங்க நூலாராய்ச்சி (தொகை நூல்கள்)

பரிபாடல் வசனம்

குறுந்தொகை வசனம்

காதல் மணம் (களவும் கற்பும்)

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 12 | குறியாக முழங்கும் | குறியாக, முருக்குச் செறிந்த சிலம்பிற் (கவலை அற்று) உறங்கும் கவரிமான், பார்த்து இலங்குகின்ற அருவியோடு நரந்தம் புல்லைக் கனவிலும் காணும், ஆரியர் நெருங்கிய பெரிய புகழுடைய இமயத்துக்கும் குமரிக்குமிடையே உள்ள புகழ்ந்து சொல்லப்படும் அரசரின் வெற்றியைத் தொலைத்து, முழங்கும். |
| 14 | 24 | ஒலிக்கின்ற........ ..........சோறு | உண்பாரும் தின்பாரும் கணக்கிடற்கரியர்; உலக்கைகள், ஒலிக்கின்ற பூண்கள் மழுங்கப் பெற்றன;<br>சமையல் செய்யும் மடாக்கள் இடங்கள் தோறும் தேம்பின் இலைகள்போல் நின்றன; ஊன் வெட்டும் பட்டடைகள் காய்ச்சிய இரும்புபோல் சிவந்து கிடந்தன; இவற்றைக் கண்டு எவரும் மதிமருளுவர்; இவ்வாறான குறைவிலவாத சோறு. |
| 17 | 8 | மாகிய கரிடத்து | மாகிய நகரிடத்து |
| 19 | 11 | குரவின் | குரவின் |
| ,, | 17 | வதண்ணளி | தண்ணளி |
| ,, | 21 | தற்குல | தன்குல |
| 20 | 11 | ஆவர வாரிக்கும் | ஆரவாரிக்கும் |
| 24 | 13 | அன்று | அறனன்று |
| 27 | 11 | கோ | கோ. |
| 30 | 26 | யை | யை) |
| 32 | 17 | அணிந்தொரும் | அணிந்தோரும் |
| 48 | 25 | போல்மென்று | போல்வேமென்று |
| 62 | 8 | நுவல்வதும் | நுவலும் |
| 63 | 22 | புலாந்து | புலர்ந்து |
| 64 | 7 | எழாம் பதிகம் | எட்டாம் பதிகம் |
| 74 | 6 | தியு, சிலம்பும் | தியசிலம்பும், |
| 76 | 16 | செஞ்சு | நெஞ்சு |

Ceylon University College
Colombo 7th June 1936.

In rendering the Paṭṭupattu or the Ten Idylls into prose Pandit N. S. Kandiah Pillai of Jaffna has done real service to Tamil since the Idylls are, in their classical poetic form, unintelligible to most even with the commentary of the famous Nachi.. kkiniyar.

Mr. Kandiah Pillai's version is true to the original, and yet simple enough to be understood by pupils in the upper forms and students. I have no doubt that the few errors which have escaped the notice of the author will be rectified in the next edition.

Francis Kings Bury,
(Lecturer in Tamil).